POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# நகராட்சி தேர்தல் முடிவுகள்

Regd. No. TN. MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 24-2-1986 திங்கள் வெளியூர் 25-2-1986 செவ்வாய் [இதழ் 125

## பல்வேறு இடங்களில் கழக வேட்பாளர்கள் முன்னணி

(பிற்பகல் 2 மணி நிலவரம்)

**சென்னை, பிப். 24- நகராட்சித் தேர்தலில் வாக்குகள் எண்ணப்பட்டதில் பல்வேறு இடங்களில் கழக வேட்பாளர்கள் முன்னணியில் உள்ளனர்.**

**மயிலாடுதுறை நீங்கலாக தமிழகத்தில் உள்ள 97 நகராட்சிகளுக்கு நேற்று வாக்குப்பதிவு நடைபெற்றது. இன்று (திங்கள்) காலை 7-30மணிக்கு வாக்குகள் எண்ணும் பணி துவங்கியது**

பகல் 11-30 மணிக்குக் கிடைத்த தகவலின்படி மதுரை மாவட்டத்தில் திருமங்கலம் நகராட்சி தவிர இதர எல்லா நகராட்சிகளிலும் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகக் கூட்டணி முன்னணியில் இருந்தது.

நெல்லை மாவட்டத்தில் பாளையங்கோட்டை, மேலப்பாளையம் நகராட்சிகளில் கழகக் கூட்டணி முன்னணியில் இருந்தது.

### திருநெல்வேலி

திருநெல்வேலியில் கழக வேட்பாளர் ஆதம் 3 ஆயிரம் வாக்குகள் அதிகம் பெற்று முன்னணியில் இருந்தார்.

அண்ணா மாவட்டத்தில் திண்டுக்கல்பழனி நகராட்சிகளில் கழகக் கூட்டணி முன்னணியில் இருந்தது.

சேலம் மாவட்டத்தில் ஆரம்பத்தில் இருந்த நிலை மாறி சூரமங்கலம், குமாரபாளையம் ஆகிய நகரங்களில் கழகக் கூட்டணி முன்னணிக்கு வந்துகொண்டிருந்தது.

சூரமங்கலம் நகராட்சிக்கு 3வது வார்டிலும் 4-வது வார்டிலும் கழகக் கூட்டணி வேட்பாளர்கள் வெற்றி பெற்றதாக அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டது.

### திருப்பூர்

கோவை மாவட்டம் திருப்பூரில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் ஆரம்பத்திலிருந்தே முன்னணியில் இருக்கிறது.

### காமராசர் மாவட்டம்

விருது நகரில் கழகக் கூட்டணி வேட்பாளர் முன்னணியில் இருக்கிறார்.

திருவில்லிபுத்தூரில் கழக வேட்பாளர் முன்னணியில் இருக்கிறார்.

அருப்புக் கோட்டையில் ஆரம்பம் முதலே இழுபறி நிலை இருந்து வருகிறது

தர்மபுரியில் கழகக் கூட்டணிவேட்பாளர்முன்னணியில் இருக்கிறார்.

### காஞ்சிபுரம்

காஞ்சிபுரம் நகரசபை தேர்தலில் நான்கு வார்டுகளை கழக அணி கைப்பற்றியுள்ளது.

4வது வார்டில் கழகத்தை சேர்ந்த வி. ராஜேந்திரன் வெற்றி பெற்றுள்ளார்.

இரண்டாவது வார்டில் காங்கிரசை சேர்ந்த வி. பன்னீர்செல்வம் வெற்றி பெற்றுள்ளார்.

5-வதுவார்டில்கழகத்தைச் சேர்ந்த சந்திரா என்பவர் வெற்றி பெற்றிருக்கிறார். மற்றொருவார்டிலும் கழக வேட்பாளர் வெற்றி பெற்றுள்ளார் தொடர்ந்து வாக்குகள் எண்ணும்பணி நடைபெற்று வருகிறது.

## கடைசி செய்தி

### தென் மாவட்டங்களில் கழகம் முந்துகிறது

காமராசர் மாவட்டத்தில் விருதுநகர், சிவகாசி. அருப்புக்கோட்டை, சாத்தூர், திருவில்லிபுத்தூர் ஆகிய நகராட்சிகளில் கழகக் கூட்டணி வெற்றி பெற்று இருக்கிறது.

நெல்லை மாவட்டத்தில் திருநெல்வேலி, பாளையங்கோட்டை, மேலப்பாளையம் உட்பட 7 நகராட்சிகளில் கழகக் கூட்டணி வெற்றி பெறும் நிலையில் இருக்கிறது.

மதுரை மாவட்டத்தில் தேனி, பெரியகுளம், கம்பம் சின்னமனூர் ஆகிய நகராட்சிகளில் கழகக் கூட்டணிவெற்றி பெறும்நிலையில் இருக்கிறது.

குமரி மாவட்டத்தில் 3 நகராட்சிகளைக் கழகக் கூட்டணி கைப்பற்றும் நிலை இருக்கிறது.

தென் மாவட்டங்களில் கழகக் கூட்டணி பெரும்பான்மையான நகராட்சிகளைக் கைப்பற்றும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## ருக்மணி அருண்டேல் காலமானார்: புரட்சித்தலைவர் அஞ்சலி

சென்னை, பிப். 24— சென்னைஅடையாற்றில் உள்ள ''கலாக்ஷேத்ரா' வின் நிறுவனத் தலைவரும்; டாக்டர் அன்னி பெசன்ட் இயக்கத்தில் ஈடுபட்டவருமான டாக்டர் ருக்மணிஅருண்டேல் இன்று அதிகாலை சென்னையில் காலமானார் அவருக்கு வயது 82.

டாக்டர் ருக்மணிஅருண்டேல் சிறிது காலம் நோய் வாய்ப்பட்டிருந்தார். சென்னை அடையாற்றில் உள்ள தனியார் மருத்துவமனை ஒன்றில் அவர் சிகிச்சை பெற்று வந்தார்.

அவருக்குநுரையீரல்புற்று நோய் ஏற்பட்டிருந்ததாக சொல்லப்பட்டது.அண்மையில் அவரது உடல்நிலை தேறி வந்தது. ஆனால் இன்று காலை அவரது உடல் நிலை மோசம் அடைந்தது மூச்சு விடுவதற்கு அவர் சிரமப்பட்டார். இன்று அதிகாலை 5 45 மணிக்கு அவரது உயிர் பிரிந்தது ருக்மணி அருண்டேலுக்கு இப்போது வயது 82 உயிர் பிரியும்போது அவரது மூத்த சகோதரி 91 வயதான டாக்டர் சிவகாமி உடன் இருந்தார்.

டாக்டர் ருக்மணிஅருண்டேல் உலகப்புகழ் வாய்ந்தவர்.

சின்னஞ்சிறு வயதிலேயே நாட்டின் விடுதலை இயக்கத்தில் பேரார்வம் கொண்டவர். டாக்டர்அன்னிபெசண்டின் பேச்சுகளால் கவரப்பட்டு பிரம்மஞான சமாஜத்தின் நடவடிக்கைகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார் நாட்டின் விடுதலைப் போராட்டத்திலும் அவர் ஈடுபட்டார்.

நடனம், நாட்டியம் என்பது ''தேவதாசி'' பிரிவினருக்குத்தான் சொந்தமான ஒரு தொழில் என்ற நிலைமையை அறவே மாற்றி நடனம் இந்த நாட்டின் தலை சிறந்த கலை சொத்து என்று அறிவித்தவர் ''சதிர்'' ''சின்ன மேளம்'' என்ற நிலையைமாற்றி பரத நாட்டியக்கலைக்கு புத்துயிர் அளித்தவர் ருக்மணி அருண்டேல்.

சென்னை பிரம்மஞான சபையில் நிறுவப்பட்ட இந்த கலைச்சங்கம் பின்னர் தனியாக அடையாறு பகுதியில் 'கலாக்ஷேத்திரம். என்று இயங்கத் துவங்கியது.

நடனம்நாட்டியம், இசை கலா நிகழ்ச்சிகள் மூலம் இந்தியாவின் கலாசாரத்தை வளர்த்து,உலகத்தின் மூலை முடுக்குகளில எல்லாம் பரவச் செய்தவர் ருக்மணி அருண்டேல்.

உலக பல்கலைக்கழகங்கள் அவருக்கு பல்வேறு துறைகளில் டாக்டர் பட்டங்களை கொடுத்து கவுரவித்துள்ளன.

நாட்டியக்கலை மூலம் இந்தியாவின் கலாச்சாரத்தை உலக நாடுகளில் வளர்ந்துவந்தவர் ருக்மணி அருண்டேல்.

கடந்த 1904ஆம் ஆண்டில் மதுரை நகரில் பிறந்த ருக்மணிக்கு 16 வயதிலேயே திருமணம் நடந்தது

பிரம்மஞான சபையை நிறுவிய டாக்டர் அன்னி பெசண்ட் அம்மையாருக்கு உறுதுணையாக இருந்த ஆங்கிலேயர்ஜார்ஜ் அருண்டேலை அவர் 1920-ம் ஆண்டு திருமணம் செய்து கொண்டார். அப்போது ருக்மணிக்கு வயது 16. டாக்டர் அருண்டேலுக்கு வயது 42.

பிரம்மஞான சபையின் கொள்கைகளுக்கு தன்னை அர்ப்பணித்துக் கொண்டு நாட்டின் விடுதலை,மகளிர் முன்னேற்றம் சுயநலம் அற்ற சேவை, கண்மூடிப் பழக்கங்களைக் களைந்தெறிவது ஆகியவற்றில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டு சேவை புரிந்தார்,

நாட்டியத்தில் பேரார்வம் கொண்டு அந்தக்கலையில் தேர்ச்சி பெற்றார். ஆஸ்திரேலியா சென்று பாலே நாட்டியத்திலும் தேர்வு பெற்றார்.

ஆஸ்திரேலியாவிலிருந்து திரும்பிய ருக்மணி சென்னை மயிலாப்பூர் கௌரிஅம்மாள், மீனாட்சி சுந்தரம் ஆகியோரிடம் நாட்டியப் பாடங்களைக் கற்றார்.

சென்னைஅடையாற்றில்' உள்ள 'கலாக்ஷேத்ர' சர்வதேசப் புகழ் வாய்ந்தது.

நாட்டியத்திற்கென்று அலங்கார, அழகான கவர்ச்சி மிகு உடைகளுக்கு வடிவமைப்புகளையும் அவர் ஏற்படுத்தினார்.

அடையாற்றை அடுத்த திருவான்மியூரில் நிறுவப்பட்டுள்ள கலாக்ஷேத்ராவில் ஏராளமான மாணவிகள் பயிற்சி பெற்று வருகிறார்கள்.

ருக்மணி அருண்டேலுக்கு மத்திய அரசு பத்ம பூஷண் பட்டம் வழங்கி கவுரவித்தது.

கடந்தஆண்டு கலாக்ஷேத்திராவின்பொன்விழா நடைபெற்ற போது பிரதமர் ராஜீவ் காந்தி கலந்து கொண்டு சிறப்பித்தார்.

ருக்மணி அருண்டேல் இரண்டுமுறை மாநிலங்களவை உறுப்பினராக பணியாற்றினார்

### கவர்னர்-புரட்சித்தலைவர் இரங்கல்

ருக்மணி அருண்டேல் உடலுக்கு கவர்னர் குரானா மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் இன்று காலை 10-45 மணிக்கு ருக்மணி அருண்டேல் உடலுக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

அமைச்சர்கள் ராசாராம் அரங்கநாயகம் ஆகியோரும் அஞ்சலி செலுத்தினர்.

ருக்மணி அருண்டேலின் மறைவுக்கு இரங்கல் தெரிவித்து முதல்வர் புரட்சித் தலைவர் தந்தி அனுப்பியுள்ளார்.

அதில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:-

ருக்மணி அருண்டேல் மறைந்து விட்டார் என்ற செய்தி கேட்டதும் ஆழ்ந்த துயரம் கொண்டேன்.

தமிழகத்தின் பண்டைய கலைகளாகியஇயல்-இசை-நாடகத்துறைக்கு அவர் ஆற்றிய தொண்டு உலக அரங்கில் நிலைத்து நிற்கிறது.

அவர் மறைந்துவிட்டாலும் இயல்-இசை- நாடகத் துறையில் ஆர்வம் கொள்ளும் வருங்கால இளைஞர்கள் அவர் வளர்த்த அந்தக் கலை உணர்வை கட்டிக் காக்க வேண்டும். கலாக்ஷேத்ராவும் அந்த கலையைத் தொடர்ந்து வளர்க்கும் என்று நம்புகிறேன்.

மறைந்தஅந்தமாபெரும் பெண் மேதைக்கு என்னுடைய ஆழ்ந்த இரங்கலைத்தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அந்த அனுதாபத்தந்தியில் முதல்வர் புரட்சித்தலைவர் குறிப்பிட்டுள்ளார்.



குன்றத்தூர் பஞ்சாயத்து யூனியனில் அடங்கிய மணப்பாக்கம் கிராமத்திலுள்ள வாக்குச் சாவடியில் முதல்வர் புரட்சித்தலைவர் தமது ஓட்டைப் போடும் காட்சி.

## சுமுகமாக நடந்து முடிந்த தேர்தல்: புரட்சித்தலைவர் நன்றி

சென்னை, பிப். 24- தமிழகம் முழுவதும் உள்ளாட்சித்தேர்தல்கள் அமைதியாக நடந்து முடிந்தமைக்கு முதல்வா புரட்சித்தலைவர் நன்றி தெரிவித்துக் கொண்டுள்ளார்.

முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

நான் வணங்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே!

என்னை வழி நடத்தும் பெரியோர்களே!

என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்களே!

தமிழகம் முழுவதும் உள்ளாட்சிதேர்தல்கள்அமைதியான முறையில் நடந்து முடிந்ததை அறிந்து மிக்க மகிழ்ச்சியும், மன நிறைவும் அடைகிறேன்.

உள்ளாட்சிகளுக்கு தேர்தல் நடக்குமா என்று எண்ணியவர்களுக்கும், அதற்கு தடை ஏற்படுத்த முனைந்தவர்களுக்கும் தக்க பாடம் கற்பிக்கும் வகையில் தேர்தல்களை இந்த அரசு நடத்திக்காட்டி உள்ளது.

உள்ளாட்சித்தேர்தல்கள் சுமுகமாக நடந்து முடிந்தது. மக்கள் பிரதிநிதிகள் ஆங்காங்கே பொறுப்பு ஏற்று தத்தம் பகுதி முன்னேற்றத்துக்குப் பாடுபட வேண்டும்என்பதே அரசின் விருப்பமும் என் விருப்பமு ஆகும்.

அவ்வகையில், தேர்தல்கள் அமைதியாக நடந்து முடிந்தமைக்கு காரணமான அனைவருக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இனி, ''மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பாக' ஏற்று மக்களின் நன்மைக்கு உழைப்பதே பொறுப்பேற்க இருக்கிறவர்களின் கடமையாக இருக்கவேண்டும்

தேர்தல் பிரச்சாரங்களின் வேகமும், தேர்தலை யொட்டிய கருத்து வேறுபாடுகளும் தேர்தலோடு முடிந்து விட வேண்டும். கிராம, நகர் புறங்களில் அமைதிநிலவிஅடித்தளத்து மக்களின் வளர்ச்சிக்கு அனைவரும் பாடுபட வேண்டும்.

இதனையே அனைவருக்கும் என் வேண்டுகோளாக வைக்கிறேன்.

நன்றி,

அண்ணா நாமம் வாழ்க!

இவ்வாறு புரட்சித்தலைவா கூறியுள்ளார்,

## போலீஸ் உடையில் சீக்கிய தீவிரவாதிகள் ஆயுதக் கொள்ளை

அமிர்தரசஸ், பிப். 24- போலீஸ் உடையில் சீக்கிய பயங்கரவாதிகள் போலீஸ் நிலையம் ஒன்றில் புகுந்து ஆயுதங்களைக்கொள்ளைஅடித்தனா. 16 துப்பாககிகள் 500 தோட்டாக் மற்றும் களையும் அவர்கள் பறித்துச் சென்றனர்.

பஞ்சாபில் சீக்கியத்தீவிரவாதிகளும் பயங்கரவாதிகளும் வன்முறைச் சம்பவங்களில் ஈடுபட்டு வருகிறார்கள்.

பொதுமக்களை அவர்கள் அச்சுறுத்தி தாக்கி வருகிறார்கள். போலீசார் இந்த பயங்கர வாதிகளை பிடிக்க தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளனர்.

பஞ்சாப் மாநிலம் அமிர்த[illegible] அருகே தான்தான் [illegible] உள்ள [illegible] லீஸ் நிலை[illegible] நேற்று [illegible] கொள்ளையடித்தனர்.

கைகளில் யந்திரத் துப்பாக்கிகளை ஏந்தி வந்த அந்த பயங்கரவாதிகள் போலீஸ் உடையில் இருந்தனர்.

போலீஸ் அதிகாரிகள் தான் வருகிறார்கள் என்று பரபரப்படைந்த ரெயில்வே போலீசார் பின்னர் திடுக்கிட்டனர்.

கைகளைத் தூக்குங்கள் இல்லாவிட்டால் உங்களை சுட்டுவிடுவோம் என்று பயங்கரவாதிகள் உத்தரவிட்டனர்.

பயந்து நடுங்கி கைகளை தூக்கிய வண்ணம்போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருக்க பயங்கரவாதிகள் அங்கிருந்த துப்பாக்கிகளையும் தோட்டாக்களையும் கைப்பற்றினார்கள்.

16 துப்பாக்கிகள், 500 தோட்டாக்கள் ஆகியவற்றைப் பறித்துக் கொண்டு வெளியே றினார்கள். வெளியே தயாராக நின்று கொண்டிருந்த ஜீப் வண்டியில் அவர்கள்ஏறி தப்பிஓடினர்.

தகவல் அறிந்ததும். அமிர்தசரசிலிருந்து துணை போலீஸ் கமிஷனர் உள்பட மூத்த தலைமை போலீஸ் அதிகாரிகள் தான்தானுக்கு விரைந்து சென்றுள்ளனர்.

பயங்கரவாதிகளை பிடிக்கப் போலீசார் தீவிர நடவடிக்கைகளைமேற்கொண்டுள்ளனர்.

### படகு கவிழ்ந்து 12 மாணவிகள் சாவு

ஆமதாபாத், பிப். 24— ஆற்றில் சென்று கொண்டிருந்த படகு ஒன்று திடீரென்று கவிழ்ந்ததால் 3 ஆசிரியைகளும், 12 மாணவிகளும் நீரில் மூழ்கி இறந்தனர்.

குஜராத் மாநிலம் சபர்காந்தாமாவட்டம்மேஷ்வா ஆற்றில் இந்த பரிதாப சம்பவம் நேற்று காலை நடந்தது.

## காஷ்மீரில் பதட்டநிலை

ஸ்ரீநகரில், பிப். 24— காஷ்மீர் மாநிலத்தின் பல கிராமங்களில் வன்முறைச் சம்பவங்கள் நடைபெற்றதை அடுத்து பதட்டநிலை ஏற்பட்டுள்ளது.

அனந்த்நாக் நகரில் ஊரடங்கு உத்தரவை மீறி ஒரு கோஷ்டியினர் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இதையடுத்து அப்பகுதியில் எல்லைக்காவல் படையினர் கொடி அணி வகுப்பு நடத்தினர், ஊரடங்கு உத்தரவு அமலாக்கப்பட்டுள்ள அப்பகுதியில்நேற்று காலை 1 மணி நேரம் ஊரடங்கு உத்தரவு தளர்த்தப்பட்டது.

சில இடங்களில் கல்வீச்சு சம்பவங்கள் நடந்தன. பொதுவாக அந்த இடங்களில் அமைதி நிலவியது.

வன்முறை தொடர்பாக 33 பேரை போலீசார் அனந்த்நாக் நகரில் கைது செய்துள்ளனர்.

லோக்பவன் என்ற இடத்தில் வழிபாட்டுத்தலம் ஒன்றிற்கு 3 பேர் தீ வைத்தனர்.

ஸ்ரீநகரில் கடந்த 3 நாட்களாக ஊரடங்கு அமலில் உள்ளது. பிரமுல்லா புல்வாமா, சோபூர் ஆகிய பகுதிகளிலும் ஊரடங்கு உத்தரவு அமலில் உள்ளது.

## ஜனாதிபதி பிரதமர் இரங்கல்

மறைந்த ருக்மணிஅருண்டேலின் உடல் தகனம் இன்று மாலை நடைபெறுகிறது ருக்மணி அருண்டேலின் மறைவிற்கு இரங்கல் தெரிவித்து பிரதமர் ராஜீவ், ஜனாதிபதி ஜைல்சிங் ஆகியோர் அனுதாபச் செய்திகளை விடுத்துள்ளனர்.

### சுமை

உலகியல் வாழ்வில் கடமைகள் பல வரும்; போகும். அவற்றை சுமையெனக் கருதி விட்டால் வாழ்வில் இனிமை காண முடியாது.

— பேரறிஞர் அண்ணா

### இயல்பு

ஒவ்வொருவருக்கும் பிறவி இயல்பு என்று ஒன்று உள்ளது. அது தவிர மற்றவரோடு பழகும்போது தனி இயல்பு உண்டாவதும் உண்டு.

—தந்தை பெரியார்

ஸ்ரீரங்கம் ஜீயர் சுவாமிகளை அமைச்சர் ஆர். எம். வீ. சந்தித்து ஸ்ரீரங்கம் ராஜகோபுர கும்பாபிஷேக விழா ஏற்பாடுகள் பற்றி ஆலோசனை நடத்தினார்.

# இந்திய எல்லையில் பாகிஸ்தான் ராணுவம்: அமெரிக்கா கண்டனம்!

இஸ்லாமாபாத், பிப். 24— இந்தியாவின் கோரிக்கையைத் தொடர்ந்து எல்லை பிராந்தியங்களில் தனது ராணுவத்தை பாகிஸ்தான் வாபஸ் பெற வேண்டும் என்று அமெரிக்கா வற்புறுத்தியிருக்கிறது பாகிஸதானுக்கு அளித்து வரும் ராணுவ உதவிகளையும் அமெரிக்கா குறைத்துக்கொள்ளும் என்றும் பாகிஸ்தான் வட்டாரங்கள் தெரிவித்துள்ளன.

பாகிஸ்தானுக்கு அமெரிக்கா ராணுவ உதவிகளைச்செய்து வருகிறது. பாகிஸ்தான் அரசு இந்திய எல்லையில் தனது ராணுவ நடமாட்டத்தை நடத்தி வருகிறது.

### இந்தியா எச்சரிக்கை

இதற்கு இந்தியா கடும் கண்டனம் தெரிவித்தது. அமெரிக்காவிடம் இருந்து பெற்று வரும் ராணுவ உதவிகளை இந்தியாவுக்கு எதிராக பாகிஸ்தான் பயன்படுத்தும் என்று இந்தியா ஏற்கனவே அமெரிக்காவுக்கு தெரிவித்திருக்கிறது.

இதைத் தொடர்ந்து அமெரிக்கா பாகிஸ்தானுக்கு தாக்கீது அனுப்பியிருப்பதாகஇஸ்லாமாபாத்தில் இருந்து வெளிவரும் பத்திரிகைகள் செய்தி வெளியிட்டிருக்கின்றன.

### ராணுவத்தை வாபஸ் பெறுக

எல்லை பிராந்தியங்களில் நிறுத்தப்பட்டுள்ள ராணுவத்தை பாகிஸ்தான் உடனடியாக வாபஸ் பெற வேண்டும் என்றும் ராணுவ நடமாட்டத்தை நிறுத்திக் கொள்ளுமாறும் அமெரிக்கா அறிவுறுத்தியிருக்கிறது.

தற்போது பாகிஸ்தானுக்கு அளித்து வரும் ராணுவ ஆயுத சப்ளையையும் அமெரிக்கா மறு பரிசீலனை செய்து விரைவில் முடிவெடுக்கும் என்றும் இஸ்லாமாபாத்தில் இருந்து வெளிவரும் ‘ஜாஸ்’ எ[illegible]த்திரிகை தெரிவித்[illegible].

### வி[illegible] பேச்சு[illegible]த்தை

பாகிஸ்தானுக்கு அளிக்கப்படும் ராணுவ சப்ளை பற்றிய இறுதி முடிவு வரும் மார்ச் மாத முடிவில் ஏற்படும் என்று தெரிகிறது இதற்கான பேச்சுவார்த்தையும் விரைவில் தொடங்கும் என்று முன்னர் எதிர்பார்க்கப்பட்டது.

ஆனால் அமெரிக்கா இப்போது மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளைத் தொடர்ந்து இந்தப் பேச்சுவார்த்தை ஏற்படுமா என்பது சந்தேகமாக இருக்கிறது.

ஆனாலும் பாகிஸ்தான் நிதி அமைச்சர் பயசின் வாட்டு விரைவில் அமெரிக்கா சேன்று பேச்சுவார்த்தை நடந்துவார்என்றும் அந்தப்பத்திரிகை கூறியது

ஆப்கானிஸ்தானில்ரஷிய ராணுவம் இருப்பதைச் சுட்டிக்காட்டி தனக்கு மேலும் ராணுவ உதவி தர வேண்டும் என்று பாகிஸ்தான் அமெரிக்காவிடம் கோரும்என்றும்எதிர்பார்க்கப்படுகிறது.

ஏற்கனவே உள்ள ஆயுத சப்ளைக்கான திட்டப்படி பாகிஸ்தானுக்கு அமெரிக்கா 300 கோடி டாலர் பெறுமானம் உள்ள ஆயுதங்களை சப்ளை செய்துள்ளது. இந்த திட்டக்காலம் இந்தஆண்டுடன்முடிவடையும் தருவாயில் உள்ளது.

ஆனால் மீணடும் ஒரு புதிய உடன்பாட்டை செய்துகொண்டு மேலும் 600 கோடி டாலர் போர் ஆயுதங்களை பெறுவதற்கு பாகிஸ்தான் முயற்சி செய்கிறது.

### கோரிக்கை ஏற்பு?

ஆனால் இந்த முயற்சி வெற்றி பெறுமா என்பது சந்தேகந்தான் என்றும் இஸ்லாமாபாத் பத்திரிகை தெரிவித்துள்ளது.

பாகிஸ்தானுக்கு போர்ஆயுதங்களைமேலும் சப்ளை செய்வதில் அமெரிக்கா இணக்கம் காட்டாது என்றே தெரிகிறது

இந்தியாவின் கோரிக்கைக்கு அமெரிக்காஇசைவு தெரிவிக்கும் என்றே பாகிஸ்தான் பத்திரிகைகள் தெரிவித்துள்ளன.

# தேர்தல் சின்னங்கள் படுத்தியபாடு

மதுரை, பிப். 24— தேர்தல் சின்னங்கள் வாக்குப் பதிவின் போது மோதல் ஏற்படக்காரணமாக உள்ளன.

திருப்பரங்குன்றத்தில் வாக்குச் சாவடி ஒன்றில் தேர்தல் பணியிலிருந்த அதிகாரிக்கு டீ கொண்டு வந்தனர் உடனேஇதற்கு ஒருவர் எதிர்ப்பு தெரிவித்தார். காரணம் அங்கு கப் அண்ட் சாசர் சின்னத்தில் வேட்பாளர் ஒருவர் நிற்கிறார் எனவே மற்ற வேட்பாளர்களின் ஏஜண்டுகள் எதிர்ப்பு தெரிவித்தனர். உடனே கப் அண்ட் சாசர் அகற்றப்பட்டது.

மற்றொரு வாக்கு சாவடிக்கு வயதான ஒருவர் குடையுடன் வந்தார். உடனே சிலர் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தனர். எனவே அந்த வாக்காளர் தனது குடையை வாக்குச் சாவடிக்கு வெகு தூரத்தில் வைத்து விட்டு வாக்குப் பதிவு செய்தார்.

மற்றொரு வாக்குச் சாவடியில் நடந்ததோ இதைவிட வேடிக்கையானது. இந்த வாக்குச்சாவடிக்கு கண்ணாடியுடன் யார் வந்தாலும் உடனே கழற்றச் சொல்லி இருக்கிறார்கள். இதற்குக் காரணம் கண்ணாடி சின்னத்தில் ஒருவர் நிற்கிறார். கண்ணாடி அணிந்து வாக்காளர்கள் வருவது அவருக்கு பிரச்சாரம் செய்வது போலாகும் என்று மற்ற வேட்பாளர்களின் ஏஜண்டுகள் எதிர்ப்பு தெரிவித்ததால் இந்த நிலைமை ஏற்பட்டது. கண்ணாடி அணிந்து சென்றவர்கள் தங்கள் கண்ணாடிகளைக் கழற்றி பாக்கெட்டில் வைத்துக் கொண்டு வாக்களித்தனர். நினைத்தபடி சரியான சின்னத்தில் குத்தினார்களா, அல்லதுஅது செல்லாதஓட்டாகிவிட்டதா என்பது தானதெரியவில்லை.

# விநோத காரணங்களை காட்டி நடைபெறும் விவாகரத்துக்கள்

புதுடெல்லி, பிப். 24— விவாகரத்து செய்ய வினோதமான காரணங்களைக்கூறி மனைவியை துரத்தும் கணவன்மார் நாளும பெருகி வருகின்றனர்.

வினோத காரணங்களுக்காக நடந்த சில விவாகரத்துகள் பற்றி இங்கே குறிப்பிடபடுகிறது

மக்மவுனா கேனான். இவர்மகாராஷ்டிரமாநிலம் அமராவதி பல்கலைகழகத்தில் பணியாற்றி வருகிறார். பி. எச் டி, பட்டம் பெற்றஇந்தபெண்மணியை இவரது கணவர் விவாகரத்து செய்திருக்கிறார். இதற்குஅவர்கணவர் கூறிய காரணம என்ன தெரியுமா? மக்மவுனாகேனான் கடவுள் பக்தி இல்லாதவர் எனவே தனது மத முறைக்கு மாறாக வாழ முடியாது என கூறி பிரிந்துள்ளார்.

ஆனால் மக்மவுனா கேனான் தான் ஒரு நாத்திகர் அல்ல என்பதை பலமாக கூறுவதோடு தன்னை விவாகரத்துசெய்யவேண்டுமென்ற முடிவு செய்த கணவருக்கு இது ஒரு காரணமாக கிடைத்துள்ளது. மற்ற இன, மத மக்களுடன் தான் பழகியது தனது கணவருக்கு பிடிக்காததாலேயேஇப்படி செய்ததாக மக்மவுனா கூறுகிறார். கணவரை பிரிந்து வாழும் இவர் சோகத்தை தன் இதயத்தில் ஏந்தி கணவன் செய்த கொடுமையை எண்ணி எரிமலையாய் குமுறிக் கொண்டு வாழ்கிறார்.

மற்றொரு வினோத விவாகரத்துபூனாவில் நடந்தது. சனீபாபையாத்தர் என்ற பெண்ணை அவரது கணவர் விவாகரத்து செய்துள்ளார். இதற்கு அவர் கூறிய காரணம் என்ன தெரியுமா? மனைவியின் நடத்தை சரி இல்லையாம். இந்த விவாகரத்து 15 ஆண்டு திருமண வாழ்வு முடிந்தபின் நடந்தது. 15 ஆண்டுகளாக மனைவியின் நடத்தையில் சந்தேகம்ஏற்படாதவருக்கு திடீரென்று சந்தேகம் ஏற்பட காரணம் என்னவோ? இந்தப் புண்ணியவான் ஏற்கனவே இரு பெண்களை மணந்து விவாகரத்து செய்தவராம். மூன்றாவது பெண்ணான சனீபாபையாத்தரையும் விவாகரத்து செய்துள்ளார்.

கோலாப்பூரில் நடந்த விவாகரத்து சம்பவம் ஒன்று இன்னும் கொடுமையானது. சரீபா என்ற பெண்ணுக்கு திருமணமானது. இவருக்கு பேசியபடி இவரது பெற்றோர்கள் வரதட்சணை தரவில்லையாம்.

வரதட்சணை பணத்தை வாங்கி வருமாறு மனைவியைகொடுமைப்படுத்திய கணவன், அது தாமதமாகவே உடனே தனது மனைவியை விவாகரத்து செய்ய முடிவு செய்தார். அதற்கு அவர் தேர்ந்தெடுத்த காரணம் என்ன தெரியுமா? சரீபா முகத்திலிருந்த பருக்களை அடையாளம்காட்டி விவாகரத்து செய்துள்ளார். இந்தப் பருக்கள் தொழு நோயின் அடையாளம். எனவே தொழு நோயாளியானபெண்ணிடமிருந்துதனக்குவிவகாரத்து தரவேண்டுமென்று கோரி விவாகரத்தும் செய்து விட்டார்.

மனைவியை பிடிக்காததால் திருமணமான எட்டாவதுநாளிலேயேவிவாகரத்து நடந்துள்ளது. முக்தா இமாம்தார் என்ற பெண்மணி. சோழாபூரில் நர்சாக பணியாற்றுபவர். இவரது கணவர் திருமணமாகி எட்டு நாட்கள் இவருடன் வாழ்ந்துவிட்டுவிவாகரத்து செய்துவிட்டுபோய்விட்டாராம்அடுத்த இரண்டுமாதங்களிலேயே வேறு திருமணமும் செய்து கொண்டாராம்.

இந்தச் சோக நிகழ்ச்சிகளை முஸ்லிம் அமைப்பு ஒன்று ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சியில் பெண்கள் கூறினார்கள்.

விவாகரத்துஎன்பது முஸ்லிம் மதத்தில் வெகு இலகுவாக உள்ளது. இதனால் பெண்கள் பெருமளவில் பாதிக்கபடுகின்றனர்சுப்ரீம் கோர்ட்சமீபத்தில்ஷாபானு என்பவர் வழக்கில புதுமையான தீர்ப்பை வழங்கியது. ஜீவனாம்சம் வழங்க வேண்டுமென்று உத்தரவிட்டது. ஆனால் முஸ்லிம் மதச சட்டப்படி ஒரு ஆண் ஒரு பெண்ணை விவாகரத்து செய்தால் ஜீவனாம்சம் வழங்கவேண்டியதில்லை. சுப்ரீம் கோர்ட் தீர்ப்பை எதிர்த்தும் ஆதரித்தும் கருத்துக்கள் பரிமாறப்பட்டன.

முஸ்லிம் பெண்கள் பலரும் ஜனாதிபதியிடமும். மத்திய சட்ட அமைச்சரிடமும் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பை அமல்படுத்த கோரி வலியுறுத்தினர்.

பிரதமர் ராஜீவிடமும் இதுபற்றி வலியுறுத்தப்பட்டது

இந்தியாவிலுள்ள அனைவருக்கும் இந்திய சட்டம் பொருந்தும் என்ற வகையில் செயல்படுத்த வலியுறுத்தினர். நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யபட இருக்கும் மசோதா இந்தப் பிரச்சினைகளில் உள்ள சுமைகளை குறைக்க உதவும் என்று ராஜீவ் கூறியுள்ளார்.

# உள்ளாட்சித் தேர்தல் ப. உ. ச. நன்றி

சென்னை, பிப். 24— உள்ளாட்சித் தேர்தலில் பணியாற்றிய அதிகாரிகள் அலுவலர்கள்மற்றும் முதல்வர் புரட்சித் தலைவருக்கு அமைச்சர் ப. உ. ச நன்றி தெரிவித்துள்ளார்.

அமைச்சர் ப. உ. ச அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

1969-ம்ஆண்டு நகராட்சிகளுக்கும், 70-ம் ஆண்டு ஊராட்சிகளுக்கும் தேர்தல்கள் கடைசியாகநடைபெற்றன. அதன் பிறகு உள்ளாட்சித் தேர்தல்களில் 18 வயதை அடைந்தவர்களுக்கு வாக்களிக்கும் உரிமையையும் ஊராட்சி, ஊராட்சிஒன்றியம் மற்றும் நகராட்சி தலைவர்களை மக்களே நேரடியாக தேர்ந்தெடுக்கும் உரிமையையும் முதல்வர் புரட்சித் தலைவர் தமிழக மக்களுக்கு நல்கி உள்ளாட்சித் தேர்தல்களில் ஒரு புதுமையை புகுத்தியுள்ளார்.

### அமைதியான தேர்தல்

நேற்று தமிழ்நாட்டிலுள்ள 97 நகராட்சிகளிலும் 382 ஊராட்சி ஒன்றியங்களிலும் 12610 ஊராட்சிகளிலும் மற்றும் 635 பேரூராட்சிகளிலும் பொதுவாக அமைதியான முறையில் தேர்தல்கள் நடைபெற பொது மக்களும் அனைத்து அரசியல் கட்சிகளும் பெரிதும் உதவினர். அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

உள்ளாட்சித் தேர்தல்கள் பொதுத் தேர்தலை விட பன்மடங்கு பெரிதான ஒன்றாகும். நடைபெற்ற நகராட்சி ஊராட்சித் தேர்தல்களில் அரசு அலுவலர்கள் அரசுத்துறை நிறுவனங்கள் மற்றும் உள்ளாட்சி நிறுவனங்களை சேர்ந்தசுமார இரண்டரை லட்சம் அலுவலர்களும் காவலர்களும் பணியாற்றி உள்ளார்கள்.

### அலுவலர்களுக்கு நன்றி

தேர்தல்களை செம்மையாக நடத்தித்தந்த அலுவலர்கள் அனைவருக்கும் எனது நன்றியையும், பாராட்டையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இதற்கு'முன் உள்ளாட்சி தேர்தல்கள் நடைபெற்ற போது உள்ளாட்சித்துறை அமைச்சராக பணியாற்றும் வாய்ப்பினை பெற்றிருந்தேன். தற்போது நடைபெற்ற தேர்தல்களுக்கும் இதே துறையின் அமைச்சராக நான் பணியாற்றி தேர்தல்கள் நடத்துவதற்கு வாய்ப்பளித்த புரட்சித் தலைவருக்கு எனது ஆழ்ந்த நன்றியினை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் ப. உ. ச. அறிக்கையில் கூறினார்.

# பிலிப்பைன்ஸ்: டெலிவிஷன் நிலையத்தை எதிர்ப்புப் படைகள் கைப்பற்றின

மணிலா, பிப். 24— பிலிப்பைன்ஸ் நாட்டு ஜனாதிபதி மார்க்கோஸ் வெளிநாட்டு பத்திரிகை நிருபர்களுக்கு பேட்டியளித்துக் கொண்டிருந்தார்.

இந்நிகழ்ச்சியை டெலிவிஷன் நேரடியாக ஒளி பரப்பிக் கொண்டிருந்தது அப்போது அரசு எதிர்ப்பு படைகள் டெலிவிஷன் நிலையத்தை கைப்பற்றின.

இதைத் தொடர்ந்து அங்கு சிறிது நேரம் துப்பாக்கிச் சண்டை நடந்தது.

உள்ளே இருந்த மார்க்கோஸ் என்னவானார் என்று தகவல் கிடைக்கவில்லை.

# ஸ்டேட்பாங்க் கடனுதவி

சென்னை, பிப். 24— தமிழ்நாடு, கேரளா, பாண்டிச்சேரி ஆகிய மாநிலங்களில் தொழில் துவங்க ஸ்டேட் பாங்க் 304 கோடியே 38 லட்ச ரூபாய் வழங்கியுள்ளதாக சென்னை வட்டார தலைமை ஜெனரல் மானேஜர் தெரிவித்துள்ளார்.

ராணுவ பயிற்சி நிலையங்களிலுள்ள ராணுவத்தினருக்கு புதிய புதிய டெபாசிட் திட்டங்கள் துவங்கப்பட்டுள்ளதாகவும் அவர் தெரிவித்தார்.

# ஜெயவர்த்தனே உடனே ராஜினாமா செய்ய வேண்டும்

### சிரிமாவோ கோரிக்கை

கொழும்பு, பிப். 24— இலங்கைத் தமிழர் பிரச்சினையில் உரிய தீர்வு காணத்தவறிய இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே உடனே ராஜினாமா செய்ய வேண்டும் என்று சிரிமாவோ பண்டாரநாயகா கோரியுள்ளார்.

இலங்கைத் தமிழர்கள்-விடுதலைப்புலிகள் ராணுவத்தினரால் தினமும் சுட்டுக் கொல்லப்படுகிறார்கள்.

இலங்கை வடக்கு-கிழக்கு பகுதிகளில் 13 விடுதலைப் புலிகள் படுகொலை செய்யப்பட்டுள்ளனர்.

### ராணுவ அட்டூழியம்

இலங்கை ராணுவம் மன்னாரில் இருவரையும் திரிகோணமலையில் மூவரையும் கொன்றுள்ளது.

எட்டு பேர்யாழ்ப்பாணத்தில் மரணம் அடைந்துள்ளனர்.

இதற்கிடையே இலங்கை முன்னாள் பிரதமர் சிரிமாவோ பண்டாரநாயகா அதிபர் ஜெயவர்த்தனேக்கு ஒரு புதிய கோரிக்கையை வைத்துள்ளார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினைய்ல்சரியான தீர்வைக் காண முடியாத ஜெயவர்த்தனே உடனே ராஜினாமா செய்ய வேண்டும் என்று கோரி இருக்கிறார்.

புதிய தேர்தலை உடனே நடத்தி இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு தீர்வு காண முற்பட வேண்டும் என்றும் சிரிமாவோ கூறியுள்ளார்

# கமுதி ஊராட்சி ஒன்றியத்தேர்தல் முடிவு ஒத்திவைப்பு

ராமநாதபுரம் பிப். 24- கமுதி ஊராட்சி ஒன்றியத் தலைவர் தேர்தலுக்கான முடிவை ஒத்தி வைக்கப்பட்டுள்ளது.

ராமநாதபுரம் மாவட்டம் கமுதி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த செந்தனந்தல், கிராமத்தில் வன்முறைக் கும்பல், தேர்தல் அதிகாரிகளை மிரட்டி 390 வாக்குச் சீட்டுக்களை கைப்பற்றிச் சென்றனர்.

முன்னதாக அக்கிராம வாக்குச்சாவடி முன்பு கலவரம் நடைபெற்றது.

சுளுக்கியால் குத்தப்பட்ட ஒருவர் படுகாயமடைந்தார்.

இதையடுத்து அங்கு மறு வாக்குப்பதிவு நடைபெற உத்தரவிடப்பட்டுள்ளது.

இதையடுத்து அந்த வாக்குப் பதிவு முடிந்தவுடன் தேர்தல் முடிவு அறிவிக்கப்படும்.

இது தொடர்பாக ஒருவர் கைது செய்யப்பட்டுள்ளார்.

# மார்க்கோசிற்கு அமெரிக்காவில் நட்சத்திர ஓட்டல்கள்

நியூயார்க், பிப். 24— பிலிபைன்ஸ்சில் தேர்தல் தில்லுமுல்லுகளை செய்து அதிபர் பதவியில் ஒட்டிக் கொண்டிருக்கும் மார்க்கோசிற்கு360 கோடிரூபாய் மதிப்புள்ள நான்கு மிகப் பெரிய ஓட்டல்கள் அமெரிக்காவில் இருப்பது தெரிய வந்துள்ளது.

பிலிப்பைன்ஸ் நாட்டில் மார்க்கோசிற்கு எதிராக கிளர்ச்சிகள் நடைபெற்று வருவது தெரிந்ததே மார்க்கோசிற்கு 360 கோடி ரூபாய் மதிப்புள்ள 4பெரிய நட்சத்திர ஓட்டல்கள் இருப்பது தெரிய வந்துள்ளது. இவை இப்போது விலைக்கு வந்துள்ளன. விலைக்குவந்தபோது தான் இவை மார்க்கோசிற்குச் சொந்தமானவை என்பது தெரியவந்தது

பிலிப்பைன்ஸ் அதிபர் தேர்தலின்போது மார்க்கோஸ் அமெரிக்காவில் கோடிக்கணக்கான ரூபாய்க்கு சொத்து வாங்கியுள்ளதாகக் குற்றம்சாட்டினர். எனினும் மார்க்கோஸ் தம்பதியினர் மறுத்துள்ளனர்

மார்க்கோஸ் அமெரிக்காவிலுள்ள தனது முதலீடுகளை மாற்றுமவரை பிலிப்பைன்சிற்கு வழங்கப்படும் நிதி உதவிகளை நிறுத்துமாறும் அமெரிக்க அரசியல் பிரமுகர்கள் வலியுறுத்தியுள்ளனர்.

### பிலிப்பைன்சில் அக்கினோ அரசு

மணிலா. பிப் 24— பிலிப்பைன்ஸ் நாட்டில் மார்க்கோசிற்கு எதிராக கலவரம் நடந்து வருகிறது. அக்கினோவின் ஆதரவாளர்கள் இருடெலிவிஷன் நிலையங்களைக் கைப்பற்றியுள்ளனர் அக்கினோ அரசை அமைத்திருப்பதாகவும் அவர்கள் தெரிவித்தனர்.

# திரிபுராவில் பஞ்சம்: ஆதிவாசிகள் அசாம் காடுகளுக்கு செல்கிறா[illegible]கள்

அகர்தலா, பிப். 24— திரிபுரா மாநிலத்தில் சணல் பயிர் விளைச்சல் பாதிக்கப்பட்டதாலும், மாநில அரசு தக்க நிவாரண நடவடிக்கைகளை மேற்[illegible]தாலும், ரெய்மா [illegible]க்கு பகுதிகளைச் சேர்ந்த ஆதிவாசிகள் கூட்டம், கூட்டமாக வெளியேறி அசாம் மற்றும்.மிசோரம் மாநிலங்களுக்குச் செல்லத் துவங்கியுள்ளனர்.

அசாம் மாநிலம் கச்சார் மாவட்டம் காட்டுப் பகுதியில் மட்டும் 140 ஆதிவாசி குடும்பங்கள் திரிபுராவில் இருந்து வந்து குடியேறியுள்ளனர்.

கடந்த ஒரு பொதி 300 ரூ[illegible] விற்ற சணல் இந்த ஆண்டு 30லிருந்து 35 ரூபாய் வரை தான் விற்கிறது.

மார்க்சிஸ்ட் ஆட்சி தக்க நிவாரண நடவடிக்கைகளை மேற்கொள்ளவில்லை என ஆதிவாசிகள் கூறியுள்ளனர்.

# மீண்டும் மதுவிலக்கு அமல்: சி. சுப்பிரமணியம் வரவேற்பு

திருச்சி. பிப்: 24— மீண்டும் மதுவிலக்கை அமல்படுத்தும் தமிழக அரசின் திட்டத்தை [illegible] சுப்பிரமணியம் பெரிதும் வரவேற்றிருக்கிறார். தமிழகத்தில் [illegible]மதுவிலக்குஅடுத்த ஆண்டு முதல் அமல்படுத்தப்படும் என்று அரசு அறிவித்துள்ளது தெரிந்ததே.

தமிழக அரசின் இந்த அறிவிப்பிற்கு முன்னாள் மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம் தனது பாராட்டை தெரிவித்திருப்பதோடு பெரிதும் வரவேற்றிருக்கிறார்.

பல்கலைக் கழகங்கள் ஆராய்ச்சி மையங்களாகத் திகழவேண்டும் பல்கலைக் கழகங்கள் பரீட்சைகளை நடத்தும் பொறுப்புக்களிலிருந்து விடுபட்டிருக்க வேண்டும்என்றும் சி.சுபபிரமணியம் இங்கு நிருபர்களிடம் கூறினார்.

# 54 சதவீத மாணவர்கள்டிவி பார்க்கிறார்கள்

புதுடெல்லி, பிப். 24- பள்ளி மாணவர்களில் 54 சதவீதம் பேர் டெலிவிஷன் நிகழ்ச்சிகளை தினமும் ஒரு மணி நேரம் பார்ப்பதாக புள்ளிவிவரம் ஒன்று தெரிவிக்கிறது.

வடநாட்டில் உள்ள மாணவர்களில் 64 சதவீதத்தினர் ஞாயிற்றுக்கிழமைகளில்4 மணி நேரத்துக்கும் அதிகமாக டெலிவிஷன் பார்க்கின்றனர்.

வடமாநிலங்களில் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை இந்த நேரம் தான் டி. வி, பார்க்க வேண்டும், இன்னநிகழ்ச்சிகளைத்தான் பார்க்க வேண்டும் என்று கட்டாயப் படுத்துகின்றனர். ஆனால்தென்நாட்டில் அப்படி இல்லை என்றும் புள்ளி விவரம் தெரிவிக்கிறது.

Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS 600 029.

## ஈழத்தமிழர் பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காண

# இந்தியா மீண்டும் முயற்சி

புதுடெல்லி, பிப். 24- ஈழத்தமிழர்பிரச்சினைக்கு இலங்கை அரசு விரைவில் அரசியல் தீர்வு காண வேண்டும் என இந்திய அரசு வலியுறுத்தியுள்ளது. இலங்கை அரசோடு இந்தியா இது குறித்து பேச்சு வார்த்தை நடத்தும் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

ஈழத்தமிழர்பிரச்சினைக்கு சுமுக முடிவுகாண தமிழர் ஐக்கிய விடுதலைமுன்னணி அளித்திருந்த திட்டத்தை இலங்கை அரசு நிராகரித்து விட்டது.

அதைத் தொடர்ந்து கடந்த சில வாரங்களாக இலங்கை ராணுவத்தினர், தமிழர்கள்மீது பெரும்தாக்குதலை நடத்தி வருகிறார்கள்.

ஹெலிகாப்டரில் இருந்து சிங்கள ராணுவம் தமிழர்கள் மீது குண்டு வீசி தாக்குதலை நடத்தி வருகிறது.

இதை தொடர்ந்து நடைபெறும் இந்தத் தாக்குதல் மூலம் நாள்தோறும்நூற்று கணக்கான தமிழர்கள் கொல்லப்படுகிறார்கள்.

சிங்கள ராணுவத்தின் வெறிச் செயலை பிரதமர் ராஜீவ் கண்டித்ததோடு இலங்கை நிலைமை பெரிதும் கவலையளிப்பதாகக் குறிப்பிட்டார்.

இதைத் தொடர்ந்து இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனே அவசரக் கடிதம் ஒன்றை பிரதமர் ராஜீவ காந்திக்கு தூதர் மூலம் அனுப்பி வைத்தார்.

### புதுத் திருப்பம்

தறபோது இலங்கைபிரச்சினைக்குதீர்வுகாண புதிய முயற்சிகளை இந்தியா மேற்கொண்டுள்ளது.

ஈழத்தமிழர் பிரச்னைக்கு அரசியல் தீர்வு காண இந்தியா. இலங்கையை வற்புறுத்தும் எனத் தெரிகிறது.

இது குறித்து இந்தியா-இலங்கை அரசுகளுக்கு இடையே பேச்சுவார்த்தை நடைபெறக்கூடும்

அப்படி பேச்சுவார்த்தை நடைபெற்றால் அதில் விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகளோ, தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியினரோ பங்கேற்கமாட்டார்கள்.

முதலில் இருநாட்டு பிரதிநிதிகளுக்கு இடையே மட்டும் பேச்சு வார்த்தை நடைபெறும் அதில் ஏற்படும் முடிவை ஒட்டி பிறகு பேச்சு வார்த்தை அனைத்துப்பிரதிநிதிகளோடும் நடைபெறும்.

இலங்கை அரசின் போக்கில் மாறுதல் காணப்படாததை அடுத்து இந்தியா கடுமையான போக்கைஎடுக்கும் எனவும் எதிர்பார்க்கப் படுகிறது.

## பயிற்சி விமானம் கீழேவிழுந்து நொறுங்கியது

கோயம்புத்தூர், பிப். 24- விமானப்படையை சேர்ந்த பயிற்சி விமானம் ஒன்று கீழே விழுந்து நொறுங்கி தீப்பிடித்து நாசமாயிறறு

அதில் இருந்த விமான ஓட்டி ரானா அதிசயமாக உயிர் தப்பினார். ஆகாயத்தில் இருந்து விமானம் இறங்க தொடங்கியதும் அவர் வெளியே குதித்து பாராசூட்மூலம்உயிர் தப்பினார்.

கோயம்புத்தூர் மாவட்டம் ஒப்பணைக்காரன் பட்டியில் இந்தச் சம்பவம் நடந்தது. அங்குள்ள பள்ளிக்கூட திடலில் தான் இந்த விமானம் தரையில் இறங்கியதாகவும் கூறப் படுகிறது.

## காஷ்மீரில் சகஜ நிலை

ஜம்மு, பிப். 24— காஷ்மீரில் கலவரம் நடந்த 4 நகரங்களில் சகஜ நிலை திரும்புகிறது.

ஊரடங்கு உத்தரவு ஒரு மணி முதல் 3 மணிவரை ஸ்ரீநகரில் தளர்த்தப்பட்டுள்ளது.

காஷ்மீர் முதல்வர் ஷா ஆளுநர் ஜக் மோகனைச் சந்தித்து சட்ட அமைதி பற்றி விவரித்துள்ளார்.

ராணுவம் தொடர்ந்து உஷார் படுத்தப்பட்டு இருப்பதாகப் போலீஸ் டைரடர்ஜெனரல்கூறினார்

## வாக்களிக்க 'கியூ'வில் நின்ற பெண் குழந்தை பெற்றார்

ராமநாதபுரம், பிப். 24— வாக்களிக்க 'கியூ' வரிசையில் நின்ற பெண்ணுக்கு குழந்தை பிறந்துள்ளது.

இந்த சம்பவம் ராமநாதபுரம் நகரில் நடந்துள்ளது. ராமநாதபுரம் நகரசபைதேர்தலில்வாக்களிக்க அண்ணாநகரில் அமைக்கப்பட்டிருந்த ஓட்டுச்சாவடிக்குசரஸ்வதி என்றபெண் வாக்களிக்க வந்தார். நிறைமாத கர்ப்பிணியான இவருக்கு வரிசையில் நிற்கும் போதே பிரசவ வேதனை ஏற்பட்டது.

வலிபொறுக்க முடியாமல் சரசுவதி வாய்விட்டு கதறினார். உடனே அவரை அரசு ஆஸ்பத்திரியில் கொண்டு போய் சேர்த்தார்கள் அங்கு அழகான பெண் குழந்தை பிறந்தது. தாயும், சேயும் நலமாக உள்ளனர்.

## ஜப்பானில் 120 வயது முதியவர் மரணம்

டொக்குநோசிமா, பிப். 24— உலகத்திலேயே அதிக வயதானவரான 120 வயது மூத்த குடிமகன் கடந்த வெள்ளியன்று ஜப்பானில் காலமானார். அவரது பெயர் ஷிக்கி குயோ இஸுமி.

அவரது மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து பல்வேறு நாடுகளில் இருந்தும் பல்லாயிரக் கணக்கான தந்திகள் வந்துகுவிந்தன.

அவரது உடல் அடக்கம் செய்யப்பட்ட போது 12 வெள்ளை புறாக்கள் வானத்தில் பறக்கவிடப் பட்டன.

இறுதி ஊர்வலத்திலும் பல்லாயிரக் கணக்கான மக்கள் குழுமியிருந்து அஞ்சலி செலுத்தினர்.

ஜப்பான் நாட்டில் உள்ள டொக்குநோஷிமாவில் வசித்து வந்த இஸுமி உலகிலேயே வயது முதிர்ந்தவர் ஆவார்.

டொக்குநோஷிமா ஜப்பானில் உள்ள ஒரு சிறிய தீவு இதில் அவர் கடந்த 1865 ஆம் ஆண்டு பிறந்தார். அந்தக் காலத்தில் பிரான்சை 3-வது நெப்போலியனும், ஜெர்மனியை பிஸ்மார்க்கும் ஆண்டு வந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

## ஓட்டுப்பெட்டியைதூக்கி கொண்டுஓட்டம்:தி.மு.க. நடத்திய வன்முறை

சென்னை, பிப். 24— தமிழ் நாட்டில் ஆங்காங்கே சில இடங்களில் தி.மு.க.வினா வன்முறைச் சம்பவங்களில் ஈடுபட்ட போதிலும் பொதுவாக வாக்குப் பதிவு அமைதியாக நடந்தது.

கன்னியாகுமரிமாவட்டம் அகஸ்தீசுவரம் பேரூராட்சி பகுதியில் மூன்று வாக்குச் சாவடிகளில் சுமார் 200 பேர் அடங்கிய பெருங் கூட்டம் ஒன்று உள்ளே நுழைந்து மூன்று வாக்குச் சீட்டு பெட்டிகளை தூக்கிச் சென்றது.

இதனால் இந்த வாக்குச் சாவடிகளுக்கான தேர்தல் ரத்து செய்யப்பட்டது.

இதற்கான மறுதேர்தல் நடைபெறும்.

தூக்கிச் செல்லப்பட்ட மூன்று பெட்டிகளில் ஒரு பெட்டி பின்னர் சாலையில் கிடந்து கண்டெடுக்கப்பட்டது.

### மதுரை

மதுரைமாவட்டம்கம்பம் அருகே உள்ள கூடலூர் பேரூராட்சி தேர்தலில் ஓட்டுப்பதிவின் போது ஏற்பட்ட கலவரம் காரணமாக 4 ஓட்டுச் சாவடிகளில் தேர்தல் ரத்து செய்யப்பட்டுள்ளது.

ஓட்டுப் பதிவு நடந்து கொண்டிருந்தபோது கோஷ்டியாக வந்த பெண்கள் சில ஓட்டுச் சாவடிகளில் புகுந்து அதிகாரிகளிடமிருந்து ஓட்டுச் சீட்டுகளைப் பறித்து தங்கள் கட்சி வேட்பாளர்களின் பெயர்கள் முன்பாக முத்திரைகளை குத்தி அவற்றை ஓட்டுப்பெட்டிகளில்திணித்தனர்.

### ஓட்டு சீட்டுகளை பறித்த பெண்கள்

பிறகு வேறு கோஷ்டியினர் அதே போல் ஓட்டுச் சாவடிகளில் அத்துமீறி நுழைந்து மீதி ஓட்டு சீட்டுகளைக் கைப்பற்றி தங்கள் வேட்பாளரின் சின்னம் முன்பாக முத்திரைகளைக் குத்தினர். தேர்தல் அதிகாரிகள் என்ன செய்வது என்று தெரியாமல் பிரமை பிடித்தவர்களாக நின்று கொண்டிருந்தனராம்.

இச்சம்பவங்களின்போது சில நாட்டு வெடிகுண்டுகள் வெடிக்கப்பட்டன.

இவற்றைத் தொடர்ந்து போட்டி கட்சிகளின் ஆதரவாளர்கள் இடையே கைகலப்பு நடந்ததாகவும், அப்போது ஒருவர் வானை நோக்கி துப்பாக்கியால் சுட்டதாகவும், வைக்கோல் போருக்கு தீ வைக்கப் பட்டது எனவும் மாவட்ட ஆட்சித்தலைவர் வரதராஜன் தெரிவித்தார்.

கூடலூரில் இச்சம்பவத்தின் போது நாட்டு வெடி குண்டுகளை வீசியதில் போலீஸ் துணை சூப்பிரண்டு, இரு போலீசார் ஒரு தாசில்தார் ஆகியோருக்கு காயம் ஏற்பட்டது.

ஓட்டுப்பதிவு ரத்து செய்யப்பட்ட 4 ஓட்டுச் சாவடிகளின் வாக்காளர் எண்ணிக்கை 2,525 ஆகும்.

கலவரம் காரணமாக தேர்தல் ரத்து செய்யப்பட்ட 6வது வார்டில் மறு ஓட்டுப் பதிவு வருகிற 28ந் தேதி நடைபெறும்

### கள்ள ஓட்டு

திருச்சியில் தென்னூர் பகுதியில் உள்ள காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் கட்சி தேர்தல் அலுவலகத்தின் மீதுதி.மு.கவினர் தாக்குதல் நடந்தது கல்வீசியதில் சிலர் காயம் அடைந்தனர்.

கா. கா. தே. கா.ஊழியர்கள் தேர்தல் அலுவலகத்தில் கள்ள ஓட்டுகள் போடுவதற்காக ஆட்களை தயார் செய்து வைத்திருந்த போது இந்தத்தாக்குதல் நடந்ததாகக்கூறப்படுகிறது.

உடனடியாக போலீசார் விரைந்து வந்து நிலைமையை கட்டுப்படுத்தினர்.

### மோதல்

காமராசர் மாவட்டம் அருப்புக்கோட்டை பஞ்சாயத்து யூனியனுக்கு உட்பட்ட பாடல் குடியில் ஒரு வாக்குச் சாவடியில் இரு வாக்காளர்கள் கோஷ்டிகளிடையே மோதல் ஏற்பட்டதில் அவர்களைக் கலைக்க போலீசார் கண்ணீர் புகைக்குண்டுகளைப் பயன் படுத்தினர்.

சிலர் ஆள் மாறாட்டம் செய்து வாக்களிக்க முயன்றதே இந்த மோதலுக்கு காரணம் என்றுபோலீசார் தெரிவித்தனர்.

### போடி நாயக்கனூர்

மதுரை மாவட்டம்போடி நாயக்கனூரில் கத்தி, அரிவாள் ஆயுதங்களுடன் தி.மு.க.வினர் கழகத்தினரை தாக்கினர். இந்தத் தாக்குதலில் 10 பேர் காயமடைந்தனர்.

### தஞ்சை

பந்தநல்லூர் கீழச்சூரியன் மூலை கிராமபஞ்சாயத்து தலைவர் பதவிக்கு கலியமூர்த்தி அழகப்பன் ஆகியோர் போட்டியிடுகின்றனர். அழகப்பனின் ஆதரவாளர்கள் ஒரு கோஷ்டியாக வாக்களிக்க வந்தனர். அவ்வாறு அவர்கள் வந்தது ஆட்சேபிக்கப்பட்டதை தொடர்ந்து ரவிச்சந்திரன் என்பவரும் மற்றவர்களும தாக்கப்பட்டனர். ரவிச்சந்திரன் திருப்பனந்தாள் மருத்துவமனையில் சிகிச்சைக்காக சேர்க்கப்பட்டுள்ளார்.

### கல்வீச்சு

மதுரைமாவட்டம் ஆண்டிப்பட்டி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த சுபபுலாபுரத்தில் சுயேச்சை வேட்பாளர்களை ஆதரிக்கும் வெவ்வேறான இரு கோஷ்டிகள் இடையே மோதல் ஏற்பட்டது.

இந்த இரு கோஷ்டியினரும் வெவ்வேறு சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது.

இந்த கல்வீச்சு, மோதலில் 8 பேர் காயமடைந்தனர்.

செல்லம்பட்டி பஞ்சாயத்து யூனியன் பகுதியில் விக்ரமங்கலம் என்னுமிடத்தில் ஓட்டுச் சாவடிக்குள்ளாக போட்டி வேட்பாளர்களை ஆதரிக்கும் கோஷ்டிகள் இடையே கைகலப்பு ஏற்பட்டதால் ஓட்டுப்பதிவு சற்று நேரம் பாதிக்கப்பட்டது. போலீசார் வந்து அமைதியை நிலைநாட்டினர்.

புளியங்குளம் என்னுமிடத்தில் காலை 9.30மணி வரை 8 பெண்களும் 20 ஆண்களும் மட்டுமே வாக்களித்திருந்தனர்.

பிறகு திடீரென லாரிகளில் சுமார் 100 பேர் வந்து தங்கள் அனைவருக்கும் உடனே ஓட்டுச்சீட்டு அளிக்கப்படவேண்டும் என நிர்ப்பந்தித்தனர். அதிகாரிகள் மறுக்கவே ஓட்டுச் சாவடி மீது கற்களை வீசினர். பின்னர் அவர்கள் அமைதிப் படுத்தப்பட்டனர். அவர்கள் அனைவரும் பின்னர் கியூவில் நின்று ஓட்டுப்போடச் சம்மதித்தனர்.

தென்னாற்காடு மாவட்டத்தில்மரக்காணம் அருகே கோட்டக்குப்பம் பேரூராட்சியில் ஒரு வார்டில் ஓட்டுப்பதிவு 2 மணி நேரம் நீடிக்கப்பட்டது. ஓட்டுப் போட ஒருவர் வந்தபோது அவர் அந்த கிராமத்தைச் சேர்ந்தவர் அல்ல என்று கூறி தேர்தல் ஏஜண்டு ஒருவர் ஆட்சேபம் தெரிவித்தார்.

இதனைத் தொடர்ந்து ஏற்பட்ட தகராறில் தேர்தல் ஏஜண்டு தாக்கப்பட்டார். இதனால் தொடர்ந்து ஓட்டுப்பதிவு நின்றது.

மாவட்ட ஆட்சித் தலைவரும் போலீஸ் சூப்பிரண்டும் தலையிட்டு அமைதிப்படுத்தினர்.

நெல்லிக்குப்பம் நகரசபை தேர்தலில் தேர்தல் சின்னத்தை சைகைமூலம் காட்டி ஓட்டுக் கேட்டதாக மூன்று வேட்பாளர்கள் இடையே தகராறு மூண்டது. அப்போது கைகலப்பு ஏற்பட்டது மற்றொரு வேட்பாளரின் சட்டைகிழிந்தது.

16 வது வார்டில் வாக்கு சாவடி அருகே தங்கள் சின்னங்களுடன் ஆதரவு கோரி கொண்டிருந்த வேட்பாளரிடையே ஏற்பட்ட சச்சரவையொட்டி ஒரு வேட்பாளர் தாக்கப்பட்டார். இன்னொரு வேட்பாளரின் சட்டை கிழிந்தது.

### செங்கற்பட்டு

கும்மிடிப்பூண்டி தாலுகாவைச் சேர்ந்த வல்லம் மேடு குப்பத்தில் வாக்குப் பதிவின்போது ஏற்பட்ட தகராறில் மாணிக்கம் (வயது 65) கன்னையன் (வயது 55) கன்னையன் ரெட்டி (வயது 40) ஆகிய மூவரும் தலையில் பலத்த காயங்களுடன் அரசுபொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

## வாக்களிக்க நரிக்குறவர்கள் காட்டிய பேரார்வம்

சிவகங்கை, பிப். 24— சிவகங்கையில் நரிக்குறவர் காலனி உள்ளது

இக்காலனியைச் சேர்ந்த நரிக்குறவர்கள் ஆர்வத்தோடு வந்து வாக்களித்தனர்.

பெண்கள் கைக்குழந்தையோடு வந்து வாக்களித்தனர்.

தர்மபுரி மாவட்டம் நாய்க்கன்கோட்டை பகுதி முன்புநக்சல்பாரிகள் பகுதியாக இருந்தது.

அங்கு நேற்று 55 சதவிகித வாக்குகள் பதிவாயின அப்பகுதியில் எந்த விதமானஅசம்பாவிதச்சம்பவங்களும் நடைபெற வில்லை.

## தென்னாற்காடு: போட்டியின்றி தேர்வு பெற்ற வேட்பாளர்கள்

கடலூர், பிப். 24— தென்னாற்காடு மாவட்டத்தில் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்ட ஊராட்சி மன்றத் தலைவர்கள் விவரங்கள் தரப்பட்டுள்ளன.

தென்னாற்காடு மாவட்டம் கண்டமங்கலம் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த ஊராட்சி மன்றங்களில் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டவர் விவரம் வருமாறு:-

குமளம் கி சீனுவாசன், பங்கஜாதேவி-வி ஆறுமுகம் சொர்ணாவூர் மேல்பாதி பு.சுப்ராமணியன்.

### விக்கிரவாண்டி

ஆசூர்- வெ. வெங்கட சுப்பன், பிரம்மதேசம்- ஏ. அய்யண்ணன்; எண்ணாயிரம்- எஸ் ஜானகிராமக் கவுண்டர்; எசாலம்- எஸ். குப்புசாமி; வி பகண்டை- வி. அருணாசலம்; ரெட்டி குப்பம்- ஆர். கொண்டா ரெட்டி; வடகுத்தி பாளையம்- கே. ராஜாங்கம்; வேம்பி- ப. லட்சுமி நாராயணன்.

### தியாகதுருகம்

கொங்கராபாளையம்: எம். கணேசன். மடம்:என். ராமலிங்கம், முடியனூர்: தங்கவேல், நாகலூர்: ராமசாமி, பொரசகுறிச்சி: இ. வீரமுத்து. புதுஉச்சிமேடு: து. கோவிந்தசாமி சித்தலூர்: இருசன், வடபூண்டி: ஆர். செல்லமுக்து குருபீடபுரம்: ஆர். தீர்த்தப்ப உடையார், பிரிதிவிமங்கலம்: சையத்உமர் சாயபு.

### ஒலக்கூர்

கீழ்பஜார்- வி. சிவப்பிரகாசம்,கீழ்மல்லூர்-கே தர்மசிவம், கீழ்பூதேவி- பங்காருசாமி, கீழ்ஆதனூர் சி. வரதாரெட்டியார், ஏவலூர்-வேணுகோபால், ஆவணிப்பூர்-ச குப்புசாமி, அத்திப்பாக்கம் - ரா. செங்கல்வராயர், பனையூர்-ரா. கிருஷ்ணமூர்த்தி, வடகடவாய் - சு மாரிக் கவுண்டர், சாரம் - ப. ராஜேந்திரன்

### மைலம்

கணபதிபட்டு: எம். செல்வராசு, கண்ணியம்: கோ. கோபாலகிருஷ்ணன், வெளியனூர்: டி ரங்கராசன், தீவனூர்: ரா. கணேசன், இராமங்கலம்: எஸ். தேவதாஸ் நாயனார் வீடூர்: கே. வி. ராஜேந்திரன்

### வானூர்

ஆதனப்பட்டு: கோபால கிருட்டிணன், அருகாபாக்கம்: ஏ. துரைசாமி கவுண்டர், கரசானூர்: கோ. நாராயணசாமி, கட்ராம்பாக்கம்: பி. ரங்கநாதன், கீ. கூத்தபாக்கம்: வ. சுப்பிரமணியம். கோரைகேணி அரிபத்திர கவுண்டர், நெமிலி; என்.பி.விவேகாநந்தர் வி.பரங்கனி ரங்கநாதகவுண்டர்பரிக்கல்பட்டு ப. பட்டாபி, பொன்னம்பூண்டி கி. ரத்தினம், ரங்கநாதபுரம்: என். அனந்த பத்மநாபன், செங்கமேடு: மு. பழனி உடையார், தென்சிறுவாவலூர்: எம். லட்சுமி காந்தன் என்ற செங்கேணி கவுண்டர், தலையாணி குப்பம்: எம் ராமகிருட்டிணன், தென்கோடிப்பாக்கம்: பி, நடேசன், நெற்குணம்:கே. சின்னராஜி, திருச்சிற்றம்பலம்: ஆர். பாபு சத்தியமூர்த்தி.

### மரக்காணம்

பனிச்சமேடு ஆனையப்ப கிராமணி கீழ்பேட்டை பெ. பாண்டுரங்கன்; கீழ் ஆலப்பாக்கம் பெருமாள் நாயுடு, கீழ்நல்லூர், ச. கண்ணன், கீழ்அடசல் நா. சுப்ரமணிய கவுண்டர், வடபலப்பாக்கம்ரா.எல்லப்பன் ஆத்தூர் து. பட்டாபி ரெட்டியார்.

### செஞ்சி

ஆலம்பூண்டி. குப்புசாமி ரெட்டியார், ஒட்டம்பட்டு. டி ராசாராம் செட்டியார் புதுப்பாளையம் ஆர்,முத்துசாமி,அத்தியூர் டி. பழனி, சிறுநாம்பூண்டி, ஆர். சீத்தாராமன், நல்லான்பிள்ளை பெற்றாள் வி வரதன். ரெட்டிபாளையம். துரைராஜ், மீனமூர். ஆசீஸ் என்கிற ஜெயினுலாவுதின். நாகலாம்பட்டு திரு விக்கிரமன்.

## வாக்குச் சாவடியில் திடீர் மரணம்

மதுரை. பிப். 24— மதுரை மாவட்டம் சேடப்பட்டி பஞ்சாயத்து ஒன்றியத்தில் அடங்கிய கீழ நாயக்கன் பட்டியில் மொக்கைமான் என்ற தேர்தல் அதிகாரி வாக்குப் பதிவைக் கண்காணித்து வந்தார். காலை 10 30 மணி அளவில் தனக்கு நெஞ்சுவலி ஏற்படுவதாகக் கூறினார் உடனே அங்கேயே சுருண்டு விழுந்து மரணமடைந்தார்.

ஆண்டிப்பட்டி பஞ்சாயத்து யூனியனுக்கு உட்பட்ட சீனிநாயக்கன் பட்டியில்ஒரு வாக்குச்சாவடியில் தேர்தல் அலுவலக பணி புரிந்த ஆசிரியர் ஒருவர் வாக்குப்பதிவு துவங்கிய சிறிதுநேரத்தில் மாரடைப்பால் மரணமடைந்தார். இதனால் வாக்குப்பதிவு பாதிக்கப்படவில்லை

## அர்ஜுன்சிங் மாஸ்கோ பயணம்

புதுடெல்லி. பிப். 24 இந்திராகாங்கிரஸ் துணை தலைவர்அர்ஜுன்சிங்தலைமையில் 4பேர் கொண்ட இந்திரா காங்கிரஸ் தூதுக்குழு மாஸ்கோவிற்கு பயணமானது,

மாஸ்கோவில் நடைபெறும் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநாட்டில் கலந்து கொள்வதற்காக விசேஷ அழைப்பின் பேரில் இந்தத் தூதுக்குழு மாஸ்கோ சென்றுள்ளது.

## ஏழை விவசாயிகளைக் கொன்று இலங்கை ராணுவம் அட்டூழியம்

கொழும்பு, பிப். 24- இலங்கை ராணுவத்தினர் ஏழை அப்பாவி விவசாயிகளை பயங்கரப் படுகொலை செய்திருப்பது பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்று கத்தோலிக்க மதகுருமாரும். மட்டக்களப்பு நகர மக்கள் கமிட்டி துணைத் தலைவருமான பாதர் சந்திரா பெர்னான்டோ கேட்டுக் கொண்டார்.

கிழக்கு அம்பாறைமாவட்டத்தில் உடும்பங்குளத்துக்கு மட்டக்களப்பு மற்றும் அக்கரைப்பட்டு மக்கள் பிரதிநிதிகள் கூட்டுக் கமிட்டி ஒன்று எரிந்து கொண்டிருந்த வைக்கோல் குவியல்களுக்கிடையே கருகிய பல சடலங்களைக் கண்டனர். வயல் வெளிகளில் துண்டிக்கப்பட்ட தலைகளும் சிதறிக் கிடந்தன. நூற்றுக்கணக்கான உறவினர்கள் அங்கு அதிர்ச்சி மேலிட்டு மவுனமாக நின்றிருந்தனர்.

அண்மையில் நடைபெற்ற அச்சம்பவத்தில் இலங்கை ராணுவத்தினர் 60க்கு மேற்பட்ட தமிழர்களை சுட்டுக் கொன்று கொளுத்தியதாகக் கூறப் படுகிறது,

இப் படுகொலையை நேரில் கண்ட கத்தோலிக்க மதகுரு யு. என். ஐ. நிருபருக்கு தொலைபேசிமூலம் தகவல் தந்தார்.

தொலைபேசியில்அவர் கூறியதாவது:- இத்தகைய படுகொலையை பற்றி நான் இடிஅமீன் மற்றும் இட்லர் பற்றிய புத்தகங்களில்கூட படித்ததில்லைதிரைப்படங்களில் பார்த்ததில்லை என்றும் கூறினார்.

ஏழை அப்பாவி விவசாயிகள் இப்படி படுகொலை செய்யப்பட்டிருப்பது குறித்துவிசாரணை நடத்த கோரி நகர கமிட்டிகள் அதிபர் ஜெயவர்தனேக்கும் தேசிய பாதுகாப்புத் துறை அமைச்சர் லலித் அதுலத் முதலிக்கும் தந்திகள் அனுப்பி உள்ளன என்று பெர்னாண்டோ கூறினார் கமிட்டி உறுப்பினர்கள் சங்கமண்கண்டி என்னுமிடத்தில் இருந்து 10 கிலோ மீட்டர் நடந்து சென்று உடும்பங்குளத்தை அடைந்தனர்.

பிணக்குவியலில் 60சடலங்களை தாங்கள் எண்ணியதாகவும் இறந்தவர்களில் 52 பேரின் பெயர்களை அப்பகுதி மக்களிடம் கேட்டறிந்ததாகவும் கூறினார்.

### ராணுவம் வெறிச்செயல்

இலங்கை ராணுவத்தினரும், போலீஸ் அதிரடிப் படையினரும் அருகேயுள்ள லோகுடாலா முகாமிலிருந்து வந்து அக்கிராம நெல்வயல்களைச் சூழ்ந்து கொண்டனர், அறுவடை செய்து கொண்டிருந்த தொழிலாளர்களை கண்டபடி அவர்கள் சுட்டுத் தள்ளி வெட்டிக் கொன்றும் இருக்கின்றனர் என்று நேரில் கண்டவர்கள் கூறிய தகவல்களைத் தாங்கள் சேகரித்துள்ளதாகவும் தெரிவித்தார்.

நெல் வயல்களின் உடமையாளர் ஆறுமுகன், நல்லதம்பியும் படுகொலை செய்யப்பட்டவர்களில் ஒருவர் அவரது மூன்று மகன்களும் மாடுகள் மேய்த்துக் கொண்டிருந்த சில குழந்தைகளும் அவரோடு பலியாகி உள்ளனர்.

மாண்டவர்களில் பெரும்பாலோர் சுற்றுப்புற கிராமங்களைச் சேர்ந்தவர்களாவர். அலிகாம்பேயில்8 பேர் அக்கறைப்பட்டு சுரக்கல் முனையில் 15 பேர் இவர்களைத் தவிர நெல் அறுவடையானவயல்களில் சிதறிக் கிடந்த நெல்லைப் பொறுக்கிக் கொண்டிருந்த நரிக்குறவர்கள் எட்டு பேரும் ராணுவத்தினரால் சுட்டுக் கொல்லப்பட்டிருக்கிறார்கள்.

படுகொலையிலிருந்து தப்பிய இருவர் வாய் பேசாது செயலிழந்து தவிக்கின்றனர். ராணுவத்தினர் சில பெண்களைக் கற்பழித்தனர் என்றும் குழுவினரிடம் புகார்கள் வந்துள்ளன,

## ஆபாச புத்தகம்: ரஜினீஷ் மீது வழக்கு

சிம்லா, பிப். 24— ரஜினீஷ் சாமியார் எழுதிய ஒருபுத்தகத்தை ஆட்சேபித்து ஹிமாசலப்பிரதேச குலு நகரைச் சேர்ந்தநவல் கிஷோர் தாகூர் என்பவர் வழக்குத் தொடர்ந்தார்.

இவ்வழக்கு தொடர்பாக வரும் மார்ச் 4ம் தேதி நீதிமன்றத்தில் ஆஜாராக வேண்டும் என்று ரஜினீஷுக்கு குலுநகர நீதிபதி சம்மன் அனுப்ப உத்தரவிட்டார்.

கடந்த மாதம் காட்மாண்டுவிற்கு செல்லும் முன் குலுவில் ரஜினீஷ் தங்கி இருந்தார். அப்போது அவரது புத்தகம் ஒன்றும் சுவரொட்டி ஒன்றும் தனது மனதை புண்படுத்தி விட்டதாகவும் தம்மை வெறுப்படையச் செய்ததாகவும் கூறி நவல் கிஷோர் தாகூர் வழக்குத் தொடர்ந்துள்ளார்.

## "செக்ஸ் சாமியார்" ரஜினீஷுக்கு கிரேக்க நாட்டிலும் கடும் எதிர்ப்பு

அயோஸ்திக்கோலாஸ் பிப். 24— கிரேக்க நாட்டுக்குச் சென்றுள்ள 'செக்ஸ் சாமியார் ரஜினீஷுக்கு அங்குள்ள' ஆர்த்தொடாக்ஸ் கிறிஸ்தவ மத குருக்கள் கடும் எதிர்ப்புத் தெரிவித்துள்ளனர். கிரேக்க பாரம்பரியம் கெட்டு பொது மக்களின் பாதுகாப்பும் இந்த சாமியாரால் சீரழியும் என்றும் அவர்கள் தெரிவித்தனர்.

உடலுறவு போன்ற இன்ப களியாட்டங்களை அனுபவித்துக் கொண்டே இறைவனை தியானித்து வழிபடலாம் என்ற கொள்கையுடையவர்ரஜினீஷ் சாமியார். 54 வயதான இவர் இந்தியாவில் ஒரு தத்துவ பேராசிரியராக இருந்தவர், ஆனால்நாளாவட்டத்தில் இவருக்கு ஒரு புது வழி தோன்றியது.

அதுதான்இன்பக்களியாட்டம், உடலுறவு, நடனம், நிர்வாணமாக ஆண்களும், பெண்களும் இரண்டறக் கலந்து ஆண்டவனை தியானிப்பது. என்பது இதற்கு அமெரிக்கா, பிரிட்டன், ஜெர்மனி, பிரான்ஸ் முதலிய ஐரோப்பிய நாடுகளில் பெரும்ஆதரவு ஏற்பட்டது.

### பணக்கார சீடர்கள்

ஆயிரக்கணக்கான பணக்காரர்கள் இவருக்கு சீடர்களானார்கள், ஆண்களும், பெண்களும் டாலர்களை தண்ணீர்போல் செலவழித்தனர்.

முதன் முதலில் பம்பாய் அருகே பூனாவில் ரஜினீஷ் ஆசிரமத்தைஆரம்பித்தார்.

இந்திய வருமான வரி சட்ட திட்டங்களை மீறினார் கோடிக்கணக்கான ரூபாய் வரியையும் கட்டாமல் இரவோடு இரவாக ரஜினீஷ்சாமியார் அமெரிக்காவுக்கு விமானம் மூலம் ரகசியமாகக் கம்பி நீட்டினார்.

அமெரிக்காவில் ஒரேகான் பகுதியில் கோலாகலமான ஆசிரமம் ஒன்றை அமைத்தார் அவருடைய சீடர்களுக்குள்ளேயே சில தகராறுஏற்பட்டது மாஆனந்த்ஷீலா என்ற அவரது நேர்முக உதவியாளர் கோடிக்கணக்கான டாலர்களை சுருட்டிக்கொண்டு வெளிநாடுஓடினார்,

அமெரிக்காவிலும்செக்ஸ் சாமியாருக்கு எதிர்ப்பு ஏற்பட்டது. பல்வேறு நாட்டு பணக்கார வாலிபர்களை அமெரிக்காவில் உள்ள அழகான பணக்கார பெண்களுக்கு திருமணம் செய்து வைத்தார். இதனால் அமெரிக்க குடியுரிமையும் பாதிக்கப்பட்டது.

சாமியாருக்கு கைவிலங்கு போட்டு சிறையில் தள்ளினார்கள்.

செக்ஸ் சாமியார் சிறையில் அவதிப்பட்டார். என்னை விட்டு விடுங்கள் என்று கெஞ்சினார்.

இதைத் தொடர்ந்து ரஜினீஷை அமெரிக்கா நாடு கடத்தியது தப்பித்தோம் பிழைத்தோம்என்று இந்தியாவுக்கு ஓடிவந்த பணக்காரர்களின் மன்மதகுரு ரஜினீஷ் இமாசல பிரதேசம் குலு மலையில் தங்கினார்.

இமாசலபிரதேச மக்கள் ரஜினீஷை வெளியேறுமாறு கோரிக்கை விடுத்தனர். இந்த சாமியாரால் எங்களுடையபாரம்பரியம்-கலாச்சாரம் கெட்டுவிடும் என்றும் அவர்கள் கடும் எதிர்ப்புத் தெரிவித்தனா

இமாசலப் பிரதேசத்தில் தனது ஆசிரமத்தை தொடங்க நினைத்த ரஜினீஷ் அதை கைவிட்டார். நேப்பாளத்துக்கு இரவோடு இரவாகப்பயணமானார் ஆனால் அவரால் அங்கேயும் தாக்குப் பிடிக்க முடியவில்லை.

கடந்த சனிக்கிழமை ரஜினீஷ் சாமியார் காட்மாண்டில் இருந்து ரகசியமாக விமானம் ஒன்றில் தாய்லாந்துக்குச் செல்வதாக தெரிந்தது. ஆனால் ரஜினீஷ் சாமியார் பின்னர் கிரீசுக்குப் போய்ச் சேர்ந்தார்.

மத்தியத் தரைக்கடலில் உள்ள ஒரு சின்னஞ்சிறு தீவில் அவர் போய் இறங்கினார்.

ரஜினீஷ் சாமியாருக்கு இப்போது கிரேக்கநாட்டு கிறிஸ்தவர்கள் கடும் எதிர்ப்பு தெரிவித்தனர்.

கிரேக்க நாட்டு கலாச்சாரம், பண்பு, நாகரிகம் ஆகியவை இந்த பணக்கார மன்மத குரு ரஜினீஷால் கெட்டு விடும் என்றும் கிரேக்க நாட்டில் போர்க் கொடி உயர்த்தப்பட்டுள்ளது.

ரஜினீஷ் சாமியாரோ, கிரேக்க பிஷப்புகளை திட்டிக் கொண்டிருக்கிறார். நான் ஒரு சாக்ரடீஸ். என்னை நம்புங்கள் என்று பிதற்றிக் கொண்டிருக்கிறாா.

இப்படி எங்கே சென்றாலும் எதிர்ப்பை விலை கொடுத்து வாங்கி வரும் செக்ஸ் சாமியார் ரஜினீஷின் அடுத்த திட்டம் என்ன?

அதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

## மார்க்கோஸ் தப்பி ஓட்டம்? அக்கினோவிற்கு இந்தியா ஆதரவு

மணிலா, பிப். 24— பிலிப்பைன்ஸ் அதிபர் மார்க்கோசை எதிர்த்து 40 ஆயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் போராட்டத்தில் ஈடுபட்டனர். ராணுவ முகாம்களை புரட்சியாளர்கள் கைப்பற்றினார்கள். மார்க்கோஸ் வெளிநாட்டுக்கு தப்பி ஓடி விடுவார் என்றுதெரிகிறது எதிர்க்கட்சித்தலைவர் கோரசான் அக்கினோவை சந்திக்குமாறு இந்திய தூதருக்கு மத்திய அரசு தெரிவித்திருக்கிறது.

பிலிப்பைன்ஸ் நாட்டில் நடைபெற்ற அதிபர் தேர்தலில் போட்டியிட்ட பெர்டினாண்ட் மார்க்கோஸ் முறைகேடுகளை நடத்தினார். ஏராளமான தில்லுமுல்லுகளை செய்தார். ஓட்டுப்பெட்டிகளை கைப்பற்றி தனக்கு சாதகமாக பயன் படுத்தி வெற்றி பெற்றதாக அறிவித்துக் கொண்டார்.

இப்படி பெர்டினாண்ட் மார்க்கோஸ் பலவகை ஊழல்களை நடத்தி தேர்தலில் வெற்றி பெற்றதை அமெரிக்கா உள்பட பல வேறு மேற்கத்தியநாடுகள் கண்டனம் செய்தன.

அதிபர்தேர்தலில்போட்டியிட்ட எதிர்க் கட்சித் தலைவர் திருமதி கோரசான் அக்கினோ பெரும்பான்மை வாக்குகள் பெற்று வெற்றி பெற்றுள்ளதாகவும் தெரிவிக்கப்பட்டது.

### தேர்தல் தில்லுமுல்லு

தேர்தலில் வெற்றி பெற்றவர் கோரசான் அக்கினோதான் என்று மேற்கத்திய நாடுகள் தெரிவித்துள்ளன.

தேர்தலில் தில்லுமுல்லு செய்து வெற்றி பெற்ற மார்க்கோஸ் பதவி விலக வேண்டும் என்று பிலிப்பைன்ஸ் நாட்டுமக்கள் பெரும்பான்மையினர் போர்க்கொடி உயர்த்தியுள்ளனர்.

மார்க்கோஸ் மேலும் தவறுகளை செய்யாமல் எதிர்க்கட்சித் தலைவர் கோரசான் அக்கினோவுக்கு வழிவிட வேண்டும் என்றும் அமெரிக்க ஜனாதிபதி ரீகன் கடும் கண்டனம் தெரிவித்தார் அவரது விசேஷ தூதர் பிலிப்ஸ் அபூப்பையும் பிலிப்பைன்சுக்கு அனுப்பி மார்க்கோசை சந்திக்கச் செய்தார்.

ஆனால்மார்க்கோஸ் பதவி விலக மறுத்துவிட்டார். அதிபர் பதவி ஏற்பு நிகழ்ச்சி நடைபெறும் என்றும் அதற்கு மேற்கத்திய நாடுகளின் தூதரகங்களை வரவழைக்கப்போவதாகவும் அறிவித்தார்.

### கொதித்து எழுந்த மக்கள்

இதைத் தொடர்ந்து பிலிப்பைன்ஸ் நாட்டு மக்கள் கொதித்து எழுந்தனர்.

காந்தியின் வழிகளைபின்பற்றி அமைதிப் போராட்டம் நடத்தப்போவதாகவும் கோரசான் அக்கினோ அறிவித்தார். அக்கினோவுக்கு பிலிப்பைன்சில் ஆதரவு அதிகரித்து வருகிறது.

உண்மையாக வெற்றி பெற்றவர் அக்கினோதான் மார்க்கோஸ் அல்ல ஆகவே மார்க்கோஸ் பதவி விலக வேண்டும் என்று பிலிப்பைன்சில் மக்கள் ஆதரவு பெற்றுள்ள கிறிஸ்தவ பிஷப்புகளும் கண்டனம் தெரிவித்துள்ளனர்.

இதைத் தொடர்ந்து பிலிப்பைன்சில் உள்நாட்டுக் கலவரம் மூண்டது புரட்சியாளர்கள் கோரசான் அக்கினோவுக்கு ஆதரவு தெரிவித்து போர்க் கொடி உயர்த்தியுள்ளனர். ராணுவ முகாம்களை புரட்சியாளர்கள் கைப்பற்றினார்கள் அதிபர் மார்க்கோசின் மாளிகையை புரட்சிப் படைகள் சூழ்ந்து கொண்டன என்ற தகவல்களும் கிடைத்துள்ளன.

### பாதுகாப்பு மந்திரி ராஜினாமா

பாதுகாப்பு மந்திரி ஜுவான் பான்ஸ் என்ரிலே தனது பதவியை ராஜினாமா செய்து விட்டார துணை தளபதி பிடெல் ரமோரஸும்பதவியைராஜினாமா செய்து விட்டு புரட்சிப்படையுடன் சேர்ந்தார்.

மார்க்கோசின் விசுவாசப் படையினர் என்று சொல்லப்படுவோர் 4 டாங்கிகளிலும், சில லாரிகளிலும் புரட்சியாளர்களை தாக்க முயற்சித்தனர்.

ஆனால் சுமார் 40 ஆயிரத்துக்கும் மேற்பட்ட பொதுமக்கள் இந்த டாங்குகளை வழி மறித்து மறியல் செய்தனர். இவர்களுக்கு 25 பஸ்களில் வந்தவர்கள் உதவி செய்தனர் பஸ்கள், லாரிகள். மற்றும் இதரவாகனங்கள் கோரசான் அக்கினோவுக்கு ஆதரவாக போராட்டத்தில்ஈடுபட்டன.

### மக்கள் வற்புறுத்தல்

தில்லுமுல்லு செய்து வெற்றி பெற்ற மார்க்கோசே பதவி விலகு, திருமதி கோரசான் வாழ்க என்று மக்கள் வெள்ளம் கோஷங்களை எழுப்பின.

மார்க்கோசுக்கு ஆதரவாக வந்த டாங்குகளையும், படைகளையும் பல்லாயிரக்கணக்கான மக்கள் தடுத்து நிறுத்தி மறியல் செய்தனர்.

அமைச்சர் ஜுவான் பான்ஸ் என்ரிலே தனது கைகளில்யந்திரத்துப்பாக்கி ஏந்தி மார்க்கோசை எதிர்த்தார்.

இந்த நிலையில் அதிபர் மார்க்கோஸ் வெளி நாட்டுக்கு தப்பி ஓடலாம்என்று கூறப்படுகிறது.

மார்க்கோசின் தில்லுமுல்லு தேர்தலை கண்டனம் செய்த அமெரிக்காவே அவருக்கு உதவி செய்யலாம் என்றும் கூறப்படுகிறது.

### அமெரிக்கா உதவி

பிலிப்பைன்சில் இருந்து தப்பித்து ஓடிவிட மார்க்கோசுக்கு அமெரிக்காஉதவி செய்யும் என்றும் கூறப்படுகிறது;

பாதுகாப்பு அமைச்சர் என்ரிலே ராணுவ முகாம்களுக்குச் சென்று கோரசானுக்கு ஆதரவாகப் பிரச்சாரம் செய்தார்.

அரசு ஊழியர்கள், வியாபாரிகள், தொழிலாளர்கள், முதியோர், குழந்தைகள் இப்படி பல தரப்பட்ட மக்கள் மார்க்கோசை எதிர்த்து புரட்சிப்படையினருக்கு ஆதரவு தெரிவித்தனர்.

மக்கள் எதிர்ப்பை சமாளிக்க முடியாத மார்க்கோசின் விசுவாசப் படைகள் முகாம்களுக்கே திரும்பிச் சென்றன. டாங்கிகள் பின் வாங்கின.

### புரட்சிப் படையினர்

பிலிப்பைன்சில் உள்ள போலீஸ் நிலையங்களும் புரட்சிப்படையினர் வசமாயின பிலிப்பைன்சுடன் கூட்டு ஏற்படுத்தியுள்ள தென் கிழக்கு ஆசிய நாடுகளான புருனி, இந்தோனேஷியா மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்துநாடுகளும் பிலிப்பைன்சில் அமைதி நிலவ வேண்டும் என்று கோரிக்கை விடுத்துள்ளன.

திருமதி கோரசான் அக்கினோவுக்கு ஏற்பட்டுள்ள பேராதரவைத் தொடர்ந்து மார்க்கோஸ் எந்த நேரத்திலும் சலை மறைவாகி விடலாம்என்று கூறப்படுகிறது ஒருவேளை வெளிநாட்டுக்கு தப்பி ஓடலாம் என்று அரசியல் வட்டாரங்கள் தெரிவித்துள்ளன.

### அக்கினோவுக்கு இந்தியா ஆதரவு

அதிபர் தேர்தலில் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டுள்ள மார்க்கோசுக்கு பாராட்டுச்செய்தி அனுப்ப இந்தியா மறுத்துவிட்டது. தேர்தலில் போட்டியிட்டு தோற்றதாக அறிவிக்கப்பட்டுள்ள கோரசான் அக்கினோவுக்கு தார்மீக அடிப்படையில் ஆதரவு தெரிவிக்கவும் இந்தியா முடிவு செய்துள்ளது. பிலிப்பைன்ஸ் நாட்டு பெரும்பான்மை மக்களின் விருப்பத்துக்கும் இந்தியா மதிப்பளித்துள்ளது.

### இந்தியத் தூதர் சந்திப்பு

இதை ஊர்ஜிதம் செய்யும் வகையில் திருமதி அக்கினோவை சந்தித்து தனது ஆதரவை தெரிவிக்குமாறும் பிலிப்பைன்சில் உள்ள இந்தியத் தூதர் ரமேஷ் முலேயை இந்திய அரசு கேட்டுக் கொண்டுள்ளது. இன்று அவர் கோரசானை சந்திக்கிறார்.

மார்க்கோஸ் அறிவித்தபடி பதவி ஏற்பு வைபவம் நடைபெற்றால் அதில் இந்தியத் தூதர் கலந்து கொள்வாரா என்பது தெரியவில்லை. ஆனால் ஏற்கனவே அறிவித்தபடி அதிபர் பதவி ஏற்பு வைபவம் நடைபெறாது என்றே தெரிகிறது.

## ஆப்பிரிக்க இனவெறி: மனித உரிமை கண்டனம்

ஜெனிவா, பிப். 24— தென் ஆப்பிரிக்காவில் நடக்கும் இனவெறி அட்டூழியங்களுக்கு சர்வதேச மனித உரிமைக் கழகம் கடும் கண்டனம் தெரிவித்துள்ளது.

தென்ஆப்ரிக்காவில்பொது மக்கள் பயங்கரமாக தாக்கப்படுகிறார்கள். இதற்கு முற்றுப்புள்ளிவைக்கவேண்டும் என்று மனித உரிமைக்கழகம் வலியுறுத்தியிருக்கிறது.

## முழு நிலவன்று அதிகமாகும் மூளைக்கோளாறு

புதுடெல்லி, பிப். 24 தற்கொலைகள், கொலை நிகழ்ச்சிகள், மூளைக் கோளாறுஅதிமாகும் முழு நிலவான "பௌர்ணமி" அன்று தான் என்றுமருத்துவ நிபுணர்கள் கண்டறிந்துள்ளனர்.

பாட்னா மருத்துவக் கல்லூரி பேராசிரியர் இதுபற்றி; கூறுகையில் சாதாரண நாட்களை விட பௌர்ணமி தினத்தன்று கூடுதலாக கிரிமினல் குற்ற நிகழ்ச்சிகள் நடைபெறுவதாக தெரிவித்துள்ளார்.

## சீக்கிய தீவிரவாதிகள் பிரிட்டனில் தஞ்சம் கோருகிறார்கள்

லண்டன், பிப். 24— சீக்கிய தீவிர வாதிகள் சிலர் இங்கிலாந்து நாட்டிடம் தங்களுக்கு அடைக்கலம் தருமாறு கோரியுள்ளனர்.

இந்தியாவில் பலகுற்றங்களைப்புரிந்து விசாரணை நடந்து வரும் தீவிரவாதிகள் உள்ளிட்ட பல சீக்கிய தீவிரவாதிகள் இங்கிலாந்து நாட்டிடம் அடைக்கலம் கோரியுள்ளதாக அந்நாட்டின் நம்ப தகுந்த வட்டாரங்களிலிருந்து தகவல்கிடைத்துள்ளது.

60க்கும் மேற்பட்ட சீக்கிய தீவிரவாதிகளின் மனுக்கள் பரிசீலனையில் இருப்பதாகவும் தெரிகிறது.

இங்கிலாந்து நாட்டிடம் அடைக்கலம் கோரியுள்ள சீக்கிய தீவிரவாதிகளில் ஜஸ்வந்த்சிங்பர்சும் உள்ளார். இவரை ஒப்படைக்குமாறு இந்தியா கேட்டுக் கொண்டுள்ளது.

இங்கிலாந்துமட்டுமின்றி மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் சீக்கிய தீவிரவாதிகள் அடைக்கலம் கோரியுள்ளதாக 'காலிஸ்தான்' ஆதரவு இயக்கதலைவரான சவுகான் தெரிவித்துள்ளார்.

தீவிரவாதிகளை அடக்குவது குறித்து இந்தியா-இங்கிலாந்திடையே பேச்சு வார்த்தைகள் நடைபெற உள்ளன.

## பிலிப்பைன்சில் புரட்சிக்காரர்கள் வசம் ராணுவ முகாம்கள்

மணிலா, பிப். 24— மீண்டும் அதிபராக வந்திருக்கும் மார்க்கோசுக்கு கடும் எதிர்ப்பு தெரிவித்து பிலிப்பைன்ஸ் மக்கள் கலவரத்தில் ஈடுபட்டுள்ளனர். ராணுவமுகாம்களை புரட்சிக்காரர்கள் கைப்பற்றினர்.

பிலிப்பைன்சில் நடைபெற்ற அதிபர் தேர்தலில் மார்க்கோஸ் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டது. ஆனால் மார்க்கோசை எதிர்த்து போட்டியிட்ட கோசான் அகினோவுக்குத்தான் பெரும்பான்மை ஓட்டுகள் விழுந்ததாக கூறப்பட்டது.

அமெரிக்கா உள்பட பல்வேறு நாடுகள் கண்டனம் செய்தன.

புரட்சிக்காரர்கள்ராணுவ முகாம்களைகைப்பற்றினர்.

மார்க்கோசுக்கு எதிரான ஆர்ப்பாட்டமும் போராட்டங்களும் நடந்து வருகின்றன.

மார்க்கோசின் ஆதரவாளர்களான இரண்டு ராணுவ தளபதிகளும் நேற்று தங்களது பதவிகளை ராஜினாமா செய்தனர்.

கலவரம்பயங்கரமாகஉருவெடுக்கும் என்றும் இதை எதிர்க்க முடியாமல் மார்க்கோஸ் எங்கேயாவது ஓடி விடுவார் என்றும் ஒரு செய்தி கூறுகிறது.

## மேற்கு வங்கம், காஷ்மீர், பஞ்சாபில் அமைதி திரும்புகிறது

கல்கத்தா. பிப் 24— மேற்கு வங்கம் பஞ்சாப் காஷ்மீர் ஆகிய மாநிலங்களில் அமைதி நிலை திரும்புகிறது.

வடக்கு கல்கத்தாவில் இரு கோஷ்டிகளுக்கு இடையே பெரிய யுத்தமே நடந்தது, குண்டு வீச்சு, தீவைப்பு, கல் வீச்சு. சோடாபுட்டி வீச்சு போன்ற சம்பவங்கள் நடந்தன.

கலவரம் நடந்த இடங்களை மேற்கு வங்க அமைச்சர் பிரசந்தாசூர் நேற்று சுற்றிப்பார்த்தார்.

அந்தப் பகுதிகளில் எல்லை காவல் படையினர் ரோந்து வருகின்றனர். இப்போது அந்தப்பகுதியில் புதிதாக எந்த அசம்பாவிதம் நடக்கவில்லை.

மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு கூட பீகாரில் இருக்கிறார் அவருக்கு தகவல்தெரிவிக்கபட்டதாக அமைச்சா பிரசந்தா சூர் தெரிவித்தார்.

நேற்று முன்தினம் வன்முறை சம்பவம் தொடர்பாக 35 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

கலவரப் பகுதிகளில் கிழக்கு எல்லை துப்பாக்கி படையினர் ரோந்து வருவதாக அவர் தெரிவித்தார்.

ஒரு சமூகத்தைச் சேர்ந்தவர்கள் நடத்தியப் பிரார்த்தனை தினத்தை அடுத்து இந்த வன்முறை ஏற்பட்டதால் ராணுவமும், எல்லை காவல்படையும் உஷார் செய்யப் பட்டது என்றார் அவர்.

பஞ்சாபில் இருந்து இந்த சிவசேனா பேரணி நடத்துவதாக இருந்த பேரணியை ரத்து செய்துள்ளது.

இவர்கள் திருசூலம் பேரணி நடத்த திட்டமிட்டு இருந்தனர். பேரணியை தடுக்கும் வகையில் 42 பேர்கள் கைது செய்யப்பட்டனர்.

பஞ்சாப் பயங்கர வாதிகளை அடக்க போலீசுக்கு அதிநவீன ஆயுதங்களை பஞ்சாப் அரசு மத்திய அரசிடம் கேட்டு இருந்தது.

இத்தகைய ஆயுதங்கள் ராணுவம் பயன்படுத்துவதாகும். ஆகவே இவற்றை போலீசுக்கு வழங்க இயலாது என்று மத்திய அரசு தெரிவித்துள்ளது.

படாலா நகரில் ஊரடங்கு உத்திரவு இன்று வரை இருக்கிறது.

காஷ்மீரிலும் ராணுவம் உஷார் படுத்தப்பட்டுள்ளது

பல இடங்களில் பதட்ட நிலை இருந்தாலும் நிலைமை கட்டுக்குள் இருந்து வருகிறது.

காஷ்மீர் போலீஸ் டைரக்டர் ஜெனரல் கஜுரியா 350 பேர்கள் கைது செய்யப்பட்டு இருப்பதாகக் கூறினார்.

ராணுவம் உஷார் படுத்தப்பட்டுள்ளதே தவிர அழைக்கப்படவில்லை என்றார் அவர்.

காஷ்மீர் முதல்வர் ஜி எம். ஷா ஸ்ரீநகரில் தங்கி இருந்து சட்ட அமைதியை நேரில் பார்வையிட்டு வருகிறார்.

### ஐந்தாவது ஆண்டு கராத்தே விழா

சென்னை, பிப், 24— "தாய்-க்கு-காலின்" ஐந்தாவது ஆண்டு கராத்தே விழாதேவநேயப்பாவாணர் நூலகத்தில் நடைபெறறது.

விழாவிற்கு பி. வி நாராயணன் தலைமை வகித்தார்.

இவ்விழாவில் பலவிதமான வீர விளையாட்டுக்களை மாணவர்கள் செய்து காட்டினார்கள்.

முடிவில் இந்நிறுவனத் தலைவர் கிருஷ்ணமூர்த்தி நன்றி கூறினார்.

## திருமணமும் வரதட்சணையும்: பம்பாயில் நடத்திய ஆய்வு

பம்பாய், பிப். 24— திருமணமும், வரதட்சணையும் பிரிக்க முடியாதவை இப்படிப்பட்ட கருத்தை பெற்றோர்கள் தெரிவித்துள்ளனர்.

வரதட்சணையாகபணமோ அல்லது பொருளோ தருவது தவிர்க்கஇயலாதது என்கிறார்கள் பெற்றோர்கள். வரதட்சணை பற்றி டாடா இன்ஸ்டிடியூட்டின் சமூக விஞ்ஞானப் பிரிவு ஒருஆய்வை நடத்தியுள்ளது

600க்கும் மேற்பட்ட பெற்றோர்களை இந்த அமைப்பு வரதட்சணை பற்றி பேட்டி கண்டுகருத்து சேகரிப்பு நடத்தியுள்ளது.

திருமணத்திற்காக பணம் அல்லது பொருள் கொடுப்பது தவிர்க்க முடியாதது. இரண்டையும் பிரிக்கமுடியாது என்று பெற்றோர்கள் கூறியுள்ள [illegible]

வரதட்சணை [illegible] வதில் பணத்திற்குப [illegible] பொருள் தருவதை 95 சதவிகித பெற்றோர்கள் விரும்புகிறார்களாம்.

மணமகளுக்கு வரதட்சணை தருவது ஏன் என்பதற்கு இந்தப் பெற்றோர்கள் சில காரணங்களை சொல்லியுள்ளனர்.

எப்படி இருந்தாலும் வரதட்சணை ஒரு பொருளாதார பிரச்சினையாக இல்லை என்றும் இவர்கள் சொல்கிறார்களாம்.

தங்கள் பெண் பாதுகாப்பாக இருக்க தக்க மணமகன் பொருத்தமாக கிடைக்க வரதட்சணை தேவைப்படுகிறது என்று இந்தப் பெறறோர்கள் சொல்கிறார்களாம்.

வரதட்சணை என்ற பழக்கம் சமூகத்தில் ஊறிப்போன ஒரு வாடிக்கையாகி இருக்கிறது என்றும் ஆய்வு தெரிவித்துள்ளது.

60 சதவிகிதத்திற்கு மேற்பட்ட பெற்றோர்கள் வரதட்சணையால் திருமண பாதிப்புஏற்படவில்லைஎன்றும் சொல்கிறார்களாம்.

10 சதவிகித பெற்றோர் வரதட்சணை பிரச்சினையால் திருமணம் தாமதமாயிற்று என்றும் சொல்லி இருகின்றனர். வரதட்சணை தந்துமகளைமணம்முடித்து கொடுத்த பிறகு பிரச்சினைகள் எழுந்தன என்று 5 சதவீதத்திற்கும் குறைவானவர்கள் சொல்கின்றனர்.

இதில் 1.6 சதவிகிதத்தினர் சொன்னபடி வரதட்சணை தராததால் ஏற்பட்ட பிரச்சினை என்று சொல்லி இருக்கிறார்கள்.

வரதட்சணையாக டேப்ரிகார்டர், தங்க மோதிரம், ரொக்கம், வீடு இப்படியாக கேட்கிறார்கள் என்றும் ஆய்வில்தெரிவித்துள்ளனர்

சமுதாயத்தை வாட்டி வதைக்கும் வரதட்சணை கொடுமைக்கு இன்னமும் பிடிப்பு இருப்பதை இ ஆய்வு தெரிவிக்கிறது.

## "பாட்டா" நிறுவன இயக்குனருக்கு அனுமதி மறுப்பு

கல்கத்தா, பிப். 24— "பாட்டா" காலணி நிறுவனத்தைச்சேர்ந்த இயக்குனர் டக்ளஸ் மாக்லாடு சுங்கவரி சட்டத்தின் கீழ் கல்கத்தாவில் கைது செய்யப்பட்டுள்ளார். இவர் இப்போது ஜாமீனில் விடுவிக்கப்பட்டுள்ளார்.

கனடாவில் உள்ள டாரண்டுக்கு தம்மை செல்ல விடுமாறு டக்ளஸ் மாக்லாடு கோர்ட்டில் மனு ஒன்றைதாக்கல் செய்தார். அந்த மனுவை மாஜிஸ்திரேட்மிதாதஸ்குபடிசெய்தார். மாக்லாடு வெளிநாடு செல்ல அனுமதி மறுக்கப்பட்டது.

## அமெரிக்காவில் பயங்கர வெள்ளம்

சான்பிரான்சிஸ்கோ, பிப் 24— அமெரிக்க நாட்டிலுள்ள வடக்கு மத்திய கலிபோர்னியா பகுதியில் ஏற்பட்ட வெள்ளம்காரணமாக சுமார் 20 ஆயிரம் மக்கள் அப்பகுதியிலிருந்து வெளியேறி உள்ளனர்.